# அகஸ்தியர்

குறுந்திரட்டு, ஜாலநிகண்டு முதலிய
ஏழு நூல்கள்

(சண்டமாருத செந்தூரம், கும்மி,
வைத்தியதர்க்கம், மூலிகை மர்மம் மற்றும் நாடி)



தாமரை நூலகம்
7, என்.ஜி.ஓ. காலனி
வடபழனி, சென்னை - 600 026.

# அகஸ்தியர்

## குறுந்திரட்டு, ஜாலநிகண்டு முதலிய ஏழு நூல்கள்

(சண்டமாருத செந்தூரம், கும்மி, வைத்தியதர்க்கம், மூலிகைமர்மம் மற்றும் நாடி)


பதிப்பாசிரியர்
ஆர்.சி. மோகன்



தொலை பேசி எண் - 3620249.

தாமரை நூலகம்
7, என். ஜி. ஓ. காலனி,
வடபழனி, சென்னை - 600 026.

தாமரை வெளியீடு : 277

முதல் பதிப்பு : நவம்பர் 2002

உரிமை பெற்றது. : ©





## நூலைப் பற்றி


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அகஸ்தியர் குறுந்திரட்டு, ஞானக்கண்டு முதலிய நூல்கள் |
| பதிப்பாசிரியர் | : | ஆர். சி. மோகன் |
| வெளியிட்டோர் | : | தாமரை நூலகம் 7, என். ஜி. ஓ. காலனி, வடபழனி, சென்னை - 26. |
| பதிப்பு ஆண்டு | : | நவம்பர் 2002. |
| உரிமை | : | பதிப்பகத்திற்கு |
| நூல் வடிவம் | : | டெமி 1 x 8 |
| தாளின் தன்மை | : | 14.4 வெள்ளைத்தாள் |
| அச்சு எழுத்து | : | 12 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 115 + 7 |
| பிரதிகள் | : | 1000. |
| பைண்டிங் | : | செக்ஷன் |
| விலை | : | ரூ. 50-00 |
| அச்சிட்டோர் | : | கிரியேட்டிவ் ஆஃப்செட், சென்னை - 34. |

## பதிப்புரை

இந்த புத்தகத்தில் அகத்தியரால் இயற்றப்பட்ட அனேக நூல்கள் அடங்கியுள்ளன.

குறுந்திரட்டுச் சூத்திரம் எனும் நூல் மருத்துவம் அறுநூறு என்பதின் சுருக்கமாகக் கருதப்படுகிறது. அகத்தியர் வைத்திய வல்லாதி அறுநூறு, வைத்தியம் அறுநூறு, பாண்டு வைப்பு அறுநூறு மற்றும் ஜனக சிந்தாமணி அறுநூறு என பல அறுநூறு பாடல்களைக் கொண்ட நூல்களைப் படைத்துள்ளார். இவற்றுள் வல்லாதி அறுநூறு ஏற்கெனவே எங்களால் பதிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. வைத்தியம் அறுநூறு, மற்றும் பாண்டுவைப்பு அறுநூறு ஆகிய இரு மருத்துவ நூல்களும் விரைவில் வெளியிடப்பட உள்ளன.

மேற்க்ண்டவற்றைத் தவிர சண்டமாருத செந்தூரம், வைத்திய கும்மி, தர்க்கம் 25, மூலிகை மர்மம் மற்றும் நாடி ஆகிய நூல்களும் திரட்டப்பட்டு இதில் சேர்க்கப்பட்டுள்ளன. பெரும்பாலான நூல்கள் உரைகளுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளன. அகத்தியர் ஜாலநிகண்டு எனும் அரிய நூல் திருவல்லிக்கேணி அகஸ்தியா சித்த மருந்தக வைத்தியர் திரு சேதுராமன் அவர்கள் மனதுவந்து கொடுக்கப்பட்டது. பல நோயாளிகளின் இன்னல்களைப் போக்கிவரும் அவர் எங்களது நிறுவனத்துக்குப் பல அரிய பொக்கிஷங்களை எவ்வித பிரதிபலனும் பாராது தொடர்ந்து அளித்து வருகிறார். அவருக்கு நாங்கள் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறோம்.

இப்புத்தகம் சித்தர் நூல்கள் மீது ஈடுபாடு கொண்ட அனைத்து மக்களுக்கும் பெரிதும் பயன்படும் என நம்புகின்றோம்.

ஆர்.சி.மோகன்
பதிப்பாசிரியர்

# பொருளடக்கம்

3. அகஸ்தியர் ஜாலநிகண்டு-200

# அகத்தியர் குறுந்திரட்டு

## அறுசீர்விருத்தம்

ஆதியாங் கணேசன் காப்பாம்
அறுநூற்றுக் கருவை யெல்லாம்
சோதியாம் ஆயி பாதம்
துணையென வுட்கொண் டேத்தி
நீதியாந் திரட்டு சூத்திரம்
நிலைமருத் துவமாய்ச் சொல்ல
வாதமாம் பிணிகள் தீர்க்கு
மருந்தொடு குணமுங் கேளே.

(க-ரை) இவ்விருத்தம் மூத்த பிள்ளையார் வணக்கத்தையும் நூல் வந்த வழியையும் சொல்லுகின்றது.

(பொ - ரை) அறிவொளியை யுடையவளாகிய (என்) தாயின் திருவடிகளைத் துணையாவன வென்று உள்ளத்தில் எண்ணிப் போற்றி, மருத்துவ அறுநூறு என்னும் நூலின் உட்பொருளை யெல்லாம், ஒரு வரம்பாகிய குறுந்திரட்டுச் சூத்திரம் என்னும் பேரால் அழியாத மருத்துவமாய்ச் சொல்வதற்கு முதன்மையானவனான மூத்த பிள்ளையார் காவலாவர். இனி, வாதம் என்னும் வளியாலுண்டாகும் நோய்களின் குணங்களையும் அந்நோய்களைத் தீர்க்கும் மருந்து களையும் சொல்லக் கேட்பாய்.

இதனால் 'குறுந்திரட்டுச் சூத்திரம்' என்பது 'மருத்துவம் அறுநூறு' என்பதின் சுருக்கமாகத் தெரிகிறது. ஆனால் அவ்'வறு நூறு' இப்போது வழங்கி வருகிற பாண்டவைப்பு அறுநூறு' 'வல்லாதி அறுநூறு "ஜனக சிந்தாமணி அறுநூறு" என்பன முதலிய அறுநூறுகளாகத் தோன்ற வில்லை. ஆதலின் அந்த அறுநூறு எதுவென்று உணர்தற்கில்லை.

'குணமொடு மருந்து' என்ன வேண்டியது மோனை நோக்கி 'மருந்தொடுகுணம்' என நின்றது.

## வாதம் எண்பதிற் சிலவற்றின் பேரும், மருந்தும்

வாதந்தா னெண்ப தாகும் வருகின்ற பக்க வாதம்
சீதமெய் நடுக்கு வாதம் சிறந்திடு முடக்குவாதம்
சூதமெய்ச் சந்து வாதம் தோன்றிடு முகத்தின் வாதம்
பேதமாம் வாதந் தீரப் பெருத்திடு மருந்து கேளே.

(கு - ரை) இவ்விருத்தம் வளிப்பிணிகளுக்கு மருந்து சொல்வநாகக் கூறுகின்றது.

(பொ - ரை) வளிப்பிணியானது எண்பது வகைப்படும். வருகின்ற பக்கவாதமும், குளிர்ச்சியோடு உடலை நடுக்கும் நடுக்குவாதமும், உயர்ந்த முடக்கு வாதமும், வஞ்சத்தை யுடைய உடலிலுள்ள பூட்டுச் சந்துகளில் வரும் சந்துவாதமும், (வெள்ளிடை மலைபோல் எவர்க்கும்) தெரிகின்ற முகவாதமும், முதலாகச் சொல்லப்பட்ட பலவகையான வாதநோய்களும் தீர்வதற்கு உயர்ந்த மருந்து கேட்பாயாக.

வளிநோயானது எண்பதென்று சில நூற்றலைவர்களும் எண்பத்து நான்கென்று சில நூற்றலைவர்களும் கூறுகின்றனர். அவற்றை எல்லாம் இங்கு எழுதின் மிகப் பெருகும். ஆதலின் அவற்றை முடிந்த நூலிற்கண்டு கொள்க. பக்கவாதத்தையே பக்ஷகாத வாதம் (பாரிசவாதம்) என்று ஜீவரக்ஷாமிர்தம் என்னும் நூல் சொல்லுகின்றது. ஆயின், யூகிமுனிவர் சிந்தாமணி 800 - என்னும் நூல் பக்கவாதம் வேறு பக்ஷவாதம் வேறெனச் சொல்லுகின்றது. அவற்றை :

"உண்மையா யுடம்பெல்லாம் வாயுவாகி
உயர்கின்ற நாடியஃ தசைவு மின்றிக்
கண்மையாய்க் காயமீ தினிலே யேறிக்
கசங்கியே யிழிந்துமே வலித்துக் காணும்
பண்மையாய்ப் பக்கத்தி லிசிவ துண்டாய்ப்
பாரித்துப் பணைக்கையுங் காலுங் கோணும்
வெண்மையா யுடம்பெங்கும் வியர்வை காணும்
மெலிவு பக்க வாதத்தின் விவரந்தானே"

எனவும் ;

"தானாகக் கால்கோணிச் செத்தாற் போலத்
தாவாமற் றரைதன்னி னடக்கொண் ணாது
கானாகக் கைகளொன்றும் பிடிக்கொட்டாது
கனமாகி யுணர்ச்சியின்றிக் கைகள் கோணும்

மானாக மயிர்க்கூச்சுந் திமிர்ப்பு முண்டாம்
வாய்தானுங் கோணியே தண்ணீர் வீழும்
பேணாகம் பித்தம்போ லழன்று காணும்
பிரிவுபட்ச வாதத்தின் பெற்றி யாமே"

எனவும் யூகிமுனிவர் 800 -, ற்றில் முறையே பக்கவாதத்திற்கும், பட்ச வாதத்திற்கும் கூறப்பட்டிருக்குஞ் செய்யுள்களாலறிக.

இவ்வெண்பது வாத நோய்களையும் தமிழ்முறையாகக் கூறப்பட்ட பண்டைய நூல்களிலுள்ள;

"உள்ளடி கனத்தல் புறவடி தடித்தல்"

என்னும் முதற்குறிப்பகவலாலுமறிக.

இவற்றில் "உள்ளடி கனத்தலை" "பாதலகவாதம்" என்றும், "புறவடி தடித்தலை" பாதாக்ஷேபக வாதம்" என்றும் வடநூல் கூறுகின்றது.

அன்றிப், பக்கவாதமே பக்ஷவாதமாயின்,

"சுக்கொன்று முக்கா வேளையிரண்டு
சுகமாய்க் காய்ச்சிக் குடித்திடவே
பக்கவாயு வாதகுன்ம மெல்லாம்
பறக்கு மென்றே யடிபங்கடி"

என்னும் குடி நீராலும்,

"கண்ணினடு வேருங் கரியமா லின்தொடையும்
நண்ணு மலையாளி நாகரமும் - எண்ணியே
திக்குக் குடிநீர்செய் தேன்விட் டருந்திவிடு
பக்கவா தச்சுரம் போம் பார்"

என்னும் குடிநீராலும் அப்பக்ஷவாதம் போகவேண்டி வரும். அங்ஙனம் போகாதாகையால் அவை வெவ்வேறென்றே அறிவர் மருத்து நூலறிஞர்.

## சித்திரமூலாதிப்பொடி

மருந்துதான் சித்திர மூலம்
வளருமா விலிங்கு கொன்றை
திருந்திய முருங்கை சங்கு
சிறந்தவெள் ளறுகு வேம்பு

*பொருந்திய வெருக்கு சுக்கு*
*புகழுந்திப் பிலிம ரீசம்*
*கருந்திறல் லவண மஞ்சுங்*
*கால்மண்ட லந்தான் கொள்ளே.*

(க - ரை) இவ்விருத்தம் வாதம் எண்பதுந் தீரச் சித்திர மூலாதிப்பொடி செய்யும் வகையைக் கூறுகின்றது.

(பொ - ரை) சித்திர மூலவேர்ப்பட்டை, நன்றாய் முதிர்ந்த மாவிலிங்கப்பட்டை, கொன்றைப் பட்டை, நல்முருங்கைப்பட்டை, சங்கம்பட்டை, உயர்ந்த வெள்ளறுகு, வேப்பம்பட்டை, எருக்கம் பட்டை, சுக்கு, திப்பிலி, மிளகு, இந்துப்பு வளையலுப்பு, சோற்றுப்பு, கல்லுப்பு, சூரியுப்பு ஆகிய ஐந்துப்புகள், ஆகிய பதினாறு சரக்குகளையும் ஒரே எடையாக நிறுத்தெடுத்து வறுக்க வேண்டியவைகளை வறுத்து இடித்துத் துணியில் வடிகட்டி நோய்வன்மைக்கும், உடல் வன்மைக்கும் தக்க அளவு கால் மண்டலம் என்னும் பத்துநாள் சாப்பிட்டால் முன் சொன்னவாத நோய்கள் தீர்ந்து விடும்.

மருந்தளவு, பத்தியம் முதலியவைகளை வழக்கத்திலுணர்ந்து கொள்க.

இவ்வாத நோய்க்குத் தமிழ் வாதராக்ஷசம், வீரமெழுகு பஞ்சசூதமெழுகு, வானமெழுகு இரசப் படங்கு, இரசபற்பம் முதலியவைகளைத் தலையாய மருந்துகளாகக் கொள்க.

## தொக்கடத்தயிலம்

*கொள்ளவே யெண்ணெ யஞ்சும்*
*குலவுதில் லைப்பால் கற்கம்*
*விள்ளவே முருங்கை வாகை*
*மிகுத்தமா விலிங்கு மூலம்*
*கள்ளவிழ் காய மிந்து*
*கடிய வெள்ளுளி வசம்பு*
*உள்ளமா யெரித்துப் பின்ன*
*ருடலிற்றொக் கடமுஞ் செய்யே.*

(க - ரை) இவ்விருத்தம் முன்சொன்ன வாத நோய்களுக்குப் பூசிப் பிடிக்குந் தொக்கடத்தயிலஞ் செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) புன்கெண்ணெய், வேப்பெண்ணெய், எள் ளெண்ணெய், இலுப்பை எண்ணெய், ஆமணக்கெண்ணெய் ஆகிய ஐந்து எண்ணெய்களையும் ஒரு அளவாக நிறுத்தெடுத்து ஒரு

மண்சட்டியில் ஊற்றி, அதில் தில்லைப்பால் ஒரு அளவு கலந்து அதில் முருங்கைப்பட்டை. காட்டு வாகைப்பட்டை, மாவிலிங்கப் பட்டை, பெருங்காயம், இந்துப்பு, வெள்ளைப் பூண்டு, வசம்பு இவ்வேழு சரக்குகளையும் தூளிடித்து மேற்படி ஐந் தெண்ணெயிற் போட்டுக் காய்ச்சிப் பக்குவமான பின் வடித்து வைத்துக்கொண்டு, பின்னர் வாத நோய் கொண்டவர்களுடைய உடம்பிற் பூசித் தொக்கடஞ்செய்ய வேண்டும்.

ஐந்தெண்ணெய் இவை தாம் என்றதை ::

விழலாச்சு சந்நிக்கஞ் செண்ணெய்த் தயிலம்
விளம்பக்கேள் புன்கெண்ணெய் வேம்பி
னெண்ணெய்
அழலாகு மெள்ளெண்ணெ யிலுப்பை யெண்ணெ
யாமணக்கி னெண்ணெயிவை யஞ்சு மாகும்
தழலாக வொன்றாக்கி மருந்தைச் சேர்க்கச்
சாற்றக்கேள் ரசங்கந்தி தாளகமுஞ் சிலையும்
உழலாத லிங்கமிவை வகைக்கிரு கழஞ்சா
யொக்கவே பழங்காடி பூட்டி யாட்டே.

ஆட்டியே பழஞ்சீலை தன்னி லூட்டி
அதற்கிசைந்த குறுங்கோற்றிரி பந்தமாக்கி
நீட்டியே யெண்ணெய் குத்தித் தீக்கொளுத்தி
நினைவோடே யெண்ணெய்களை வார்க்கும்போது
வீட்டிமையில் லாதந்த மருந்துடனே தயிலம்
விடவிடவே மூன்றுதரம் விட்டி றங்கும்
ஈட்டிவைத்த தயிலமிது கைகாலிற் காசி
னெடை தேய்க்கச் சந்நிகளுஞ்சீதம் போமே.

சீதமொடு சந்நிபதின் மூன்று வாதம்
திகையாத வுளைச்சலொடு திமிரல் வாங்கும்
பேதமில்லை முகசந்நி சயித்தியங்கள் தீரும்
பிணியுள்ளோர்க் கிதுநன்று பேணி வைக்கும்
நீதமுள்ள சஞ்சீவி நோய்க்கு மார்பாணி
நீங்காத பிணிநீங்கு நித்திய சுகங்காணும்.

என்றதால் அஞ்செண்ணெயின் வகையையும், அவற்றால் ஆன மற்றோர் அஞ்செண்ணெய்த் தொக்கடத்தயிலத்தையுங் காண்க.

இது ஒருவகையி லடங்குவதன்று.

ஐந்தெண்ணெய் வாதத்தையும், சந்நியையும் போக்கு மென்றதை:

"அஞ்செண்ணெய் வாத சந்நியைப் போக்கும்" என்றதாலறிக.

வாயுவுடம்பினர் மர்த்தனத்தில் விருப்பமுள்ளவர்களும், அவ்வாத நோய்க்குத் தொக்கடம் சிறப்புள்ளது மென்றுணர்க.

தொக்கடம் தயிலத்துடனும், தயிலமில்லாமலும் செய்யலா மென்பது தேரர்கொள்கை.

வாயுவுடம்பினர் மர்த்தனத்தில் விருப்பமுள்ளவர் என்பதை :

"அங்கமர்த்தனமிசை அற்புதக்களிப்பும்"

என்றதாலும் :

வாதநோய்க்குத் தொக்கடம் சிறப்பென்பதை ;

"மர்த்தனமாகிய தொக்கடத்தின் செயல் வகுப்பேனே - சதா - நித்தமும் வாதம் பிணித்த பிணிப்பைச் செகுப்பேனே"

என்றதாலும் :

தயிலத்துடனும், தயிலமின்றியும் செய்வர் என்றதை:

"தயிலத்தைக் கொண்டுமல்லாமலுஞ் செய்வர் தரமாக - இரு - செயலுக்கு முன்சொன்ன வொன்பதுமே தொழில் தீ தேக"

என்றதாலு முணர்க.

## பித்தம் நாற்பதிற் சிலவற்றின் பேரும், மருந்தும்

செய்யதோ ரெண்ணஞ் சாகச்
சிறந்திடும் பித்தங் கேளாய்
அய்யமாஞ் சித்தப் பிரமை
அறிவிலாப் பிரமை சுற்றும்
நையவே நடுக்கல் வாந்தி
நலற்றிடு சுழற்றல் வாய் நீர்
தையலே யிவைக ளுக்குச்
சாற்றிட மருந்து கேளே.

(க - ரை) இவ்விருத்தம் பித்தப் பிணிகளின் பேர்களும் அவைகட்கு மருந்து சொல்லுகிறேனென்பதையும் சொல்லுகின்றது.

(பொ - ரை) நாற்பது வகையான பித்தங்களாகிய அவற்றில் சிலஐயபித்தம், சித்தப்பிரமை, அறிவில்லாத பிரமை, தலை சுற்றல், நடுக்கல், வாந்தி பண்ணல், நன்மையின்றிச்சுழற்றல் வாயில் தண்ணீர் சுரத்தல் ஆகிய இவைகளுக்குப் பெண்ணே மருந்து சொல்லுகிறேன் கேள்.

அய்யமாம் என்றது சிலேத்மபித்தத்தை, சித்தப்பிரமை என்றது உன்மாத பித்தம், அறிவிலாப் பிரமை என்றது மந்த பித்தம், நடுக்கல் என்றது நடுக்குப் பித்தம், வாந்தி என்றது சர்த்தி பித்தம், வாய்நீர் என்றது அசீரணபித்தம் என அறிக.

பித்தம் நாற்பதின் குணங்களை முடிந்த நூலிற்கண்டு கொள்க.

இப்பித்தம் நாற்பதையும் தமிழ்ப் பேராகப் பண்டைய மருந்து நூலில்.

"எங்கல் ஞானம் எழுந்திசை பாடல்"

என்னும் முதற்குறிப்பகவலாலுணர்க.

## அதிமதுராதிப்பொடி

*சாற்றிய மதுரங் கோட்டம்*
*தளருமஞ் சிட்டி யேலம்*
*போற்றிய நெல்லி மாஞ்சில்*
*பூரஞ் சந்தனங்கி ராம்பு*
*மாற்றிய தாளி சந்தான்*
*மருவுசீ ரகமு நாகம்*
*பாற்றுசர்க் கரையுங் கூட்டிப்*
*பரிந்துமண் டலந்தான் கொள்ளே.*

(க - ரை) இவ்விருத்தம் பித்தம் நாற்பதுக்கும், அதிமதுராதிப்பொடி செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) அதிமதுரம், உயர்ந்த (சாதி) கோஷ்டம், மஞ்சிட்டி, ஏலரிசி, நெல்லிமுள்ளி, சடாமாஞ்சில், பச்சைக்கர்ப்பூரம், உயர்ந்த சந்தனத்தூள், மொட்டெடுத்த இலவங்கம், தாளிசபத்திரி, சீரகம், சிறுநாகப்பூ இவைகளை யெல்லாம் ஒரு எடையாக எடுத்து இடித்து வடிகட்டின தூளுக்குச் சரி எடை வெண்சர்க்கரை சேர்த்துத் தக்க அளவாகக் காலை மாலை இருவேளையுமாக நாற்பது நாள் உண்ணுவாய்.

இதற்கு இது போன்ற மருந்துகள் பலவுள : அவற்றில் ஒன்றாக:

*"பஞ்ச தாரை நாற்கழஞ்சு பருத்த மதுர முக்கழஞ்*
*சிஞ்சி திப்பிலியிருகழஞ் சேலஞ் சீரமொருகழஞ்*
*சஞ்சுங்கூட்டிப்பொடி பண்ணியாவின் பாலிற்*
*கொள்வீரேல்*

மிஞ்சும் பித்தந்தலை நோயும் வெள்ளோக் காளமுள்ள
வெல்லாம்
அஞ்சிப் பயந்து நடுநடுங்கி அடவிக்கோடிப்
போய்விடுமே'
என்னும் இதனைச் செய்தாடி நற்பயன் காண்கின்றனர்

## குளிதயிலம்

பரிந்து நல்லெண்ணெய் பாலும்
பருத்தநெல் லிக்காய்ச் சாறும்
திருந்திய முசுமு சுக்கை
சீந்திலும் பொன்னாங் காணி
வருந்திய முத்தஞ் சிட்டி
மதுரமோ டேல மாஞ்சில்
பொருந்துசண் பகப்பூ கிராம்பு
புனைந்தெரி தலைக்கு வாரே.

(க - ரை) இவ்விருத்தம் பித்தம் 40 -க்கும் குளி தயிலம் செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) நல்லெண்ணெய், பசுவின்பால், பருத்த நெல்லிக் காய்ச்சாறு, முசுமுசுக்கைச்சாறு, சீந்தில் கொடிச்சாறு, பொன்னாங் கண்ணிச்சாறு, இவைகள் வகைக்குக் கால்படி சாறாக ஒரு வீசை நல்லெண்ணெயிற் சேர்த்துக் கோரைக்கிழங்கு, மஞ்சிட்டி, அதிமதுரம், ஏலரிசி, சடாமாஞ்சில், சண்பகப்பூ, இலவங்கம் இவைகள் தனித்தனி கால் பலமாக எடுத்திடித்துப் பசுவின்பால் விட்டரைத்து எண்ணெயிற் கலந்து பக்குவமாகக் காய்ச்சி வடித்து நான்கு நாள்களுக் கொருமுறை தேய்த்துத் தனி வெந்நீரிற் குளிக்க வேண்டும். அப்படிச் செய்தால் மேற் சொன்ன பித்தப் பிணிகள் நீங்கிப்போகும்.

பத்தியம் முதலியவை வழக்கத்திற் கண்டு கொள்க.

இன்னும் கீழ்வாய் நெல்லித் தயிலம் முதலியவற்றையும் கொள்க.

## சிலேத்துமம் இருபதிற் சிலவற்றின் பேரும், மருந்தும்

வார்பெறு தனத்தா யையம்
வளர்ந்திடு மிருபதாகப்
பேர்பெறு சுவாச காசம்
பெருவிரு மலுமிரத்தம்

சீர்பெறு மாந்தை யீளை
திகைத்திடு கயரோகங்கள்
தார்பெறு சுரமுமுண்டாம்
தனக்கெலா மருந்து கேளே.

(க - ரை) இவ்விருத்தம் சிலேத்துமப் பிணிகளின் பேர்களும், அவற்றிற்கு மருந்து சொல்லுகிறேன் என்பதும் சொல்லுகின்றது.

(பொ - ரை) கச்சினால் இறுக்கப்பெற்ற கொங்கைகளையுடைய பெண்ணே! ஐயப்பிணியானது இருபது வகைப்படும். அவற்றில் கீர்த்திபெற்ற சுவாச காசம், இளைப்பிருமல், இரத்த காசம், உளைமாந்தை, ஈளை, மருட்டுகின்ற கயரோகங்கள், இவைகளுடன் சேர்ந்த சுரம், ஆகிய இவைகள் தீர்வதற்கு மருந்து சொல்லுகிறேன் அவற்றைக் கேட்பாயாக.

ஐயநோய் இருபதில் சிலநோய்களை மாத்திரம் இச்செய்யுளிற் கூறினும், எஞ்சியவைகளும் உடன்கொள்ளப்படும்.

ஐயம்மேலிடின் சுவாசம், இரத்தம், கபம், இளைத்தல், இருமல் இவை உண்டாமென்பார், இங்ஙனங் கூறினார். இதனை :

"விடங்கிய ஐயங்கேள் மேலிரைப் பேற்றிடும்
அடங்கிச் சுரங்காயும் அளவற்ற கோழைநீர்
தடங்கி யிருமிடுந் தனிவிலா விரண்டு நோம்
இடங்கியுடல்வற்றி யிரத்தமுங் கக்குமே"

எனத்திருமூலரும்,

"ஆயிர நயனன் மெய்யானையினிறமே
ஆஅமிருமலு முளைவு் மசதியும்
ஆஅதாளி வாயுளறல் வேதாள நோய்
ஆயாசமேற் சுவாச மீதாகம்
ஆறாத சுரஞ்சளி மாறாத சந்நி
ஆவிவாய்ப் பானைகம் ஆவியோய்வேபோன்
ஆர்க்குவதப்பிசின் ஆர்க்குவதப்பிசின்
ஆர்கலித்தரங்கையார்கலித்தரங்கை"

எனத் தேரரும்,

"உற்பவித்த கபமீளை காசரோகம்
உற்றிடிலோ சிலேத்மமதுமீறிக்காணும்"

என அகத்தியரும் கூறியவற்றாலுணர்க.

## ஐயம் இருபதுக்கும் இஞ்சிநெய்

*தனது நல்லிஞ்சிச் சாறு*
*தருதிரி கடுகோ டேலம்*
*மனமுறு தேக்கு சிங்கி*
*வாலுழு வரிசி யிந்து*
*கனசிறு நாகங் கண்டங்*
*கத்தரி யரத்தை யோடு*
*நினைவுறு சிலேஷ்மம் போகும்*
*நெய்யெரித் துள்ளிற் கொள்ளே.*

(க - ரை) இவ்விருத்தம் ஐயம் இருபதுந்தீர இஞ்சிநெய் செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) இஞ்சிச்சாற்றில், தோல் சீவின சுக்கு, கெட்டிமிளகு, சிறுதிப்பிலி, ஏலரிசி, கண்டு பாரங்கி, கடுக்காய்ப்பூ, வாலுழுவை யரிசி, இந்துப்பு, சிறுநாகப்பூ, கண்டங்கத்தரி, சன்னராஷ்டகம் (சிற்றரத்தை) ஆகிய இப்பதினொரு சரக்குகளையும் ஒரு அளவாக எடுத்து இடித்து வடிகட்டி இஞ்சிச்சாற்றால் அரைத்து எல்லாவற்றையும் பசு நெய்யிற் கலந்து வழக்கத்திற் கண்ட அளவுபடி குடித்தால் சிலேஷ்ம நோய் இருபதும் நீங்கும்.

இஞ்சிச்சாறு கால்படியும், நெய்கால்படியும், சரக்குகள் வகைக்குக் கால் பலமுமாகக் கொள்க.

இந்த நெய்யைத்துணை மருந்தா (அநுபானமா) கக்கொள்ளின், இந்நோய்களுக்குப் பவழபற்பம், முத்து பற்பம், க்ஷய குலாந்தக செந்தூரம் முதலியவற்றை முதல் மருந்துகளாகக் கொள்க.

அளவு, நாளளவு பத்தியம் முதலியவற்றை வழக்கத்திற் கண்டு கொள்க.

இஞ்சிக்கு ஐயநோய் நீங்கும் என்றதை :

*"இஞ்சிக்கிழங்குக் கிருமலைய மோக்காளம்*
*வஞ்சிக்குஞ் சந்நிசுரம் வன்பேதி - விஞ்சுகின்ற*
*சூலையறும் வாதம்போம் தூண்டாத தீபனமாம்*
*வேலையுறுங் கண்ணாய் விளம்பு"*

என்றிருப்பதாலறிக.

## ஐயம் இருபதுக்கும் இருவேலிக் குளிதயிலம்

*எரித்தநல் லெண்ணெய் பாலும்*
*இருவேலி விலாமிச் சோடு*
*தரித்திடுஞ் சீந்தில் முத்தம்*
*சந்தனந் தேவ தாரம்*
*உரித்திடு தண்ணீர் மிட்டான்*
*உயர்நிலப் பனைநன் னாரி*
*பருத்தமஞ்சிட்டி யோடு*
*பகர்தலை தனக்கு வாரே.*

(க - ரை) இவ்விருத்தம் ஐயம் இருபதுக்கும் இருவேலிக் குளி தயிலம் செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) நல்லெண்ணெய் ஒரு வீசை, பசுவின்பால் ஒரு படி, வெட்டிவேர், விலாமிச்சம்வேர், சீந்தில்கொடி, கோரைக்கிழங்கு, சந்தனத்தூள் தேவதார சக்கை, தோல் உரித்த தண்ணீர்விட்டான் கிழங்கு, நிலப்பனங்கிழங்கு, நன்னாரிவேர், மஞ்சிட்டி என்னும் இப்பத்து சரக்குகளையும் ஒவ்வொன்று ஒவ்வொரு பலமாக எடுத்திடித்து மேற்படி பசுவின் பாலால் அரைத்து எண்ணெயிற் கலந்து தயிலபக்குவம் வரும் வரைக்கும் எரித்து வடிகட்டி இந்தத் தயிலத்தை நான்கு நாள்களுக்கொரு முறை தேய்த்து அரைப்பிட்டுத் தனி வெந்நீரில் குளிக்கவேண்டும்.

இதனால் ஒரு மண்டல எண்ணெயிட்டுக் கொள்ளல் என்னும் பன்னிரண்டு தடவை செய்யவேண்டும்.

இத்தயில மின்றியும், அரக்குத் தயிலம், அசுவகந்த பலா லாக்ஷாதயிலம் முதலியவும் முழுகலாம்.

## மூலம் ஒன்பதுக்கும் பேரும், மருந்தும்

*தனக்குறு மிரத்த மூலம்*
*தாங்குமுள் மூலஞ் சீயும்*
*சினக்குறு முளையா மூலம்*
*தீமலக் கமல மூலம்*
*மனக்குறு வாத பித்த*
*வளரைய மூல மாகும்*
*கனக்குறு மருந்து சொல்லக்*
*கன்னியே கேட்டி டாயே.*

(க - ரை) இவ்விருத்தம் மூலநோயின் தொகையும், அதற்கு மருந்து சொல்வேன் என்றுங் கூறுகின்றது.

(பொ - ரை) பெண்ணே! 1 இரத்தமூலம், 2 உள்மூலம், 3 சீ மூலம், 4 முளை மூலம், 5 வரள் மூலம், 6 கமல மூலம், 7 வாதமூலம், 8பித்த மூலம், 9 ஐய மூலம் என ஒன்பதுவகை மூலங்களாகும், இவைகளுக்கு மருந்து சொல்லக் கேட்பாயாக.

இந்த மூலரோகங்களை ஜிவரட்சாமிர்தம் என்னுநூல் ஒரு விதமாகவும், யூகிமுனிவர் சிந்தாமணி 800 என்னுநூல் இருப்பத்தொன்றென்றுஞ் சொல்லுகின்றது. இவற்றின் மாறுதல்களை அவற்றில் கண்டு கொள்க.

## மூலங்களுக்குக் கன்னிச்சருகுப்பொடி

*கன்னியின் சருகு முத்தம்*
*கருணையு மெருகுஞ் சுக்கும்*
*வன்னியாஞ் சித்திர மூலம்*
*மருள்கிழங் கொடுகடுக்காய்*
*பன்னிய பிரண்டை கொன்றை*
*பகர்புளி நறலை காட்டில்*
*துன்னிய கருணை பாலிற்*
*சூரணஞ் செய்து கொள்ளே.*

(க - ரை) இவ்விருத்தம் மூலங்களுக்குக் கன்னிச் சருகுப் பொடிசெய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) உலர்ந்த கற்றாழை மடல், கோரைக் கிழங்கு, கருணைக்கிழங்கு, மெருகங்கிழங்கு, தோல் சீவினசுக்கு, சித்திர மூலவேர்ப்பட்டை, மருள்கிழங்கு, கடுக்காய்த்தோல், பிரண்டை, கொன்றைப்பட்டை, புளிங்கருணை, காட்டுக் கருணைக்கிழங்கு ஆகிய பன்னிரண்டு சரக்குகளையும் ஒரு எடையாக எடுத்திடித்து வடிகட்டிப் பிட்டவித்து உலர்த்தி வெருகடியளவு பசுவின்பாலிற் கொண்டால் போதுமானது.

நாளளவு, பத்தியம் முதலியவைகள் வழக்கத்திற்கண்டு கொள்க.

## கிராணிபேரும், மருந்தும்,

*செய்திடு வாத பித்த*
*சேத்துமக் கிராணி மூலம்*
*கொய்திடு கிராணி வாயு*
*கூட்டிய சங்க்ரக கிராணி*

நைதிடு மேக கிராணி
நலித்திடு சீக்கிராணி
எய்திடு கிராணிக் கெல்லாம்
இனியான் மருந்து கேளே.

(கு - ரை) இவ்விருத்தம் கிராணிகளின் பேர் முதலியவைகளையும் அதற்கு மருந்துவகை சொல்லுகிறேன் என்பதையும் கூறுகின்றது.

(பொ - ரை) வாதக்கிராணி, பித்தக்கிராணி, சிலேத்துமக்கிராணி, மூலக்கிராணி, வாயுகிராணி, சங்க்ரககிராணி, மேககிராணி, வருத்துகின்ற சீக்கிராணி, முதல் உண்டாகும் எவ்வித கிராணிக்கும் இனியவைகளாகிய மருந்துகள் சொல்லக் கேட்பாயாக.

இந்நோய்களின் விளக்கங்களை முடிந்த நூலிற் கண்டு கொள்க.

## கிராணிகளுக்கு உடும்பாதிப்பொடி

இனியதோ ருடும்பு காயம்
இந்துப்பு வளைய லுப்பு
கனிய வெள்ளுள்ளி சுக்கு
கடியதிப் பிலிம ரீசம்
தனியது சவுட்டு மண்ணும்
தழற் சித்ர மூல மோமம்
பனியது பிரமிச் சாற்றிற்
பணவெடை பொடியுங்கொள்ளே.

(கு - ரை) இவ்விருத்தம் மூலங்களுக்கு உடும்பாதிப்பொடி செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) உடும்பு, பெருங்காயம், இந்துப்பு, வளையலுப்பு, வெள்ளைப்பூண்டு, தோல் சீவினசுக்கு, சிறு திப்பிலி, மிளகு, சவர்க்காரம், சித்திரமூல வேர்ப்பட்டை, ஓமம், இப்பதினோரு சரக்குகளையும் பிரமிச் சாற்றால் அரைத்து உலர்த்தி வேளைக்குப் பணவெடை அளவு உள்ளுக்குக்கொண்டால் முன்சொன்ன கிராணிகள் தீரும்.

நாளளவு, பத்தியம் முதலியவை வழக்கத்திற்கண்டு கொள்க.

## குன்மப் பேரும் மருந்தும்

பண்ணிய வாதம் பித்தம்
பகரைய குன்ம மெல்லாம்
நண்ணிய சத்தி குன்மம்
நலித்திடு வாய்நீர்க் குன்மம்

*கண்ணிய வெரியுங் குன்மம்*
*கனத்திடு புரட்டு குன்மம்*
*குண்ணியே வலித்த பொல்லாக்*
*குன்மம்போம் கூறு வோமே.*

(க - ரை) இவ்விருத்தம் குன்மப் பிணி களையும் அவற்றிற்கு மருந்து சொல்வேன் என்பதையுஞ் சொல்லுகின்றது.

(பொ - ரை) வாதகுன்மம், பித்தகுன்மம், ஐயகுன்மம், சத்திகுன்மம், வாய்நீர்க்குன்மம், எரிகுன்மம், புரட்டுகுன்மம், வலிகுன்மம் என்னும் இக் குன்மங்கள் போம் வழியைக் கூறுவோம்.

இந்நோய் விவரங்களை முடிந்த நூலிற் கண்டு கொள்க.

## குன்மங்களுக்கு நாபியாதிப் பொடி

*கூறிய நாபி சூதம்*
*கொடிய வெங்காரந் தாரம்*
*தேறிய விரு விலிங்கம்*
*திகழ்மனோ சிலையக் காரம்*
*காறிய கந்த கந்தான்*
*கனதிரி கடுகு கூட்டி*
*ஆறிய பொடிய தாக்கி*
*அதனிற்றே னருந்து வாயே.*

(க - ரை) இவ்விருத்தம் குன்மங்களுக்கு நாபியாதிப்பொடி செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) சுத்தி செய்தநாபி, சுத்திசெய்த இரசம், வெங்காரம், தாளகம், இருவி, இலிங்கம், மனோசிலை, அக்கராகாரம், சுத்திசெய்த கந்தகம், தோல் சீவின சுக்கு, மிளகு, சிறுதிப்பிலி, இவைகளை யெல்லாம் ஒரு அளவாக எடுத்து அரைத்துப் பொடி பண்ணி, அதில் (இரண்டு குன்றி அளவு) தேனில் இழைத்துச் சாப்பிடுவாய். அப்படி சாப்பிட்டால் குன்மங்கள் போய்விடும்.

நாளளவு, பத்தியம் முதலியவை வழக்கத்திற்கண்டு கொள்க.

## நீரிழிவு பேரும் மருந்தும்

*அருந்திய வாதம் பித்தம்*
*ஐயமோ டிருப தாகும்*
*வருந்திய வாதம் நாலும்*
*வளர்சலம் பித்த மாறும்*

பொருந்திய வையம் பத்தும்
போகுமே யிவைக ளெல்லாம்
திருந்திய வாத பித்த
சேத்துமந் தீர லாமே.

(க - ரை) இவ்விருத்தம் நீரிழிவு நோயின் விவரங்களையும் அது தீரும் என்பதையுஞ் சொல்லுகின்றது.

(பொ - ரை) நீரிழிவு நோயானது வாதத்தில் நான்கும், பித்தத்தில் ஆறும், ஐயத்தில் பத்தும் ஆக இருபதாம். இவைகளும் இதில் வாதபித்த, சேத்தும கலப்பு நீரிழிவுகளும் போய் விடலாகும்.

தேரர் நீருக்கு நீர்ப்பெருக்கல் நீரருக்கல் என்னும் இருகுணங்கள் உளவென்று பொதுவாகச் சொல்லியுள்ளார்.

அவற்றை

## பொது

நீரிருவினைக் குணத்தை நீயறி விரித்துச் சொல்வாம்
நீரினைப் பெருக்கலொன்று நீரினை யருக்கலொன்று
நீரிழிவுடனே கொல்லும் நீர்க்கட்டு வினைகளென்று
நீணில முரைக்கு மிந்த நீர்நிரைக் குணத்தைக் கேளாய்,

## நீரிழிவு

நீரினைப் பெருக்கலென்னு நீரிழிவிலக்கணங்கேள்
நீலவாரிதிபோற் குக்கி நீட்டிக்கு முரைதள்ளாடும்
நீவிகூடாது கைகால் நீலமாவினை நேராகும்
நீஞ்சொணாவுரனின் மூச்சு நீசமாமயக்கங் காட்டும்.

## நீரருக்கல்

நீரினையருக்கலென்னு நீர்க்கட்டின் குணத்தைக் கேட்டி
நீதமில்லாமற் கோச நீர்ப்புழை நெருப்புப் போலாம்
நீபனாயுதத்தாற்பட்ட நீலவம்பரமாங்குக்கி
நீறணி கடவுளுண்ணா நீர்க்கட்டுப் பிணியோருள்ளே
நீவிநாவயமிராமல் நீக்கமாம் வீக்கமாமெய்
நீற்றறைபோலாமூக்கு நீரறும் வழியுமம்மா

## மருந்து

நீதியுமிதற்குத்தீர்வு நீர்க்கடம்பொடுகற்றாழை
நீவிர்முக்கடுகுமுன்பின் நீக்கிமத்திமையொன்றே கொள்
நீரறுகுடி நீராக்கி நீர்மையின் முன்பின்னே கொள்
நீக்கமாமிரண்டு நோயு நீணிலமிஃது தானே.

என்னும் அகவற்றாழிசையாலறிக.

## நீரிழிவிற்கு ஆவாரையாதிக் குடிநீர்

ஆமிது மருந்தா வாரை
யலைகடல் முத்தங் கோஷ்டம்
தாமிது மருது நாவல்
தருகொட்டைக் கரந்தை பூலா
வாமிது விலந்தைக் கொட்டை
மல்லிகை நல்வி ளாவும்
போமிது கொன்றை பாதிரி
புகழுறு மதுரங் கூட்டே.

(க - ரை) இவ்விருத்தம் நீரிழிவிற்கு ஆவாரை யாதிக் குடிநீர் செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) ஆவாரம் பட்டை, கடலழிஞ்சிற் பட்டை, கோரைக்கிழங்கு, உயர்ந்த (சாதி) கோஷ்டம், மருதம்பட்டை, நாவற்பட்டை, கொட்டைக் கரந்தை, புல்லாந்தி, இலந்தைக் கொட்டை, மல்லிகை, உயர்ந்த விளாம்பட்டை, கொன்றைப்பட்டை., பாதிரிப் பட்டை, அதிமதுரம், இவைகளை ஒரு நிறையாக எடுத்திடித்து அளவுப்படி நீர்விட்டுக் குடிநீர் காய்ச்சி 10, 20, 30, 40, நாள் என்னும் விதிப்படி குடித்தால் நீரிழிவுநோய் நீங்கும்.

இதுவன்றி,

"ஆவிரை கொன்றை நாவ லலைகடல் முத்தங் கோஷ்டம்"

என்னும் குடிநீரும் உண்டு என்று சொல்வர்.

இந்நோய்க்குத் தனி அப்பிரக செந்தூரம், சொர்னாப்ரக செந்தூரம், வங்க செந்தூரம், பவழ வங்க செந்தூரம் என்னும் மருந்துகளை ஆள்வர் மருந்துநூலறிஞர்.

## அதிமதுர குளிதயிலம்

மதுரஞ்சந் தனங்கி ராம்பு
மகிழ்ந்த பச்சைக் கர்ப்பூரம்
சதிர்பெறு மேலம் நாகம்
தாளிச மாஞ்சில் மஞ்சள்
கதிர்விலா மிச்சஞ் சீந்தில்
கனமுத்தம் வேலி சட்டம்
எதிரிலா வெண்ணெய் பாலும்
எரித்து நீ மூழ்கிடாயே.

(க - ரை) இவ்விருத்தம் அதிமதிராதி குளி தயிலம் செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) அதிமதுரம், சந்தனம், இலவங்கம், ஏலரிசி, சிறுநாகப்பூ, தாளிசபத்திரி, சடாமாஞ்சில், மஞ்சள், விலாமிச்சம்வேர், சீந்தில் கொடி, கோரைக் கிழங்கு, வெட்டிவேர், புனுகு சட்டம், பச்சைக் கர்ப்பூரம், இவைகளை வகைக்குக் கால் பலமாக எடுத்திடித்துப் பசுவின் பாலிலரைத்து நல்லெண்ணெய் ஒருவீசை, பசுவின் பால் ஒரு படி இவற்றை ஒரு மண் சட்டியில் ஊற்றி அதில் முன்னர் அரைத்த மருந்துகளைக் கரைத்துத் தயில பக்குவத்திலெரித்து வடித்து முழுகுவாய்.

தயிலம் முழுக வேண்டியது நான்கு நாள்களுக்கு ஒரு முறையாதலால் அப்படியே முழுகவேண்டும். இதனை,

*வீறுசதுர் நாட்கொருக்கால்*
*நெய் முழுக்கைத் தவிரோம்"*

என்பதாலறிக.

## மேகம் இருபது.

*எளித்திடு மிரத்த மேகம்*
*இசைந்தசீ மேகந் தண்டில்*
*மரித்திடு மேகப் புண்ணாய்*
*வருத்திடு கிரிச்சம் பாளை*
*துரித்திடு துள்ளி மேகம்*
*சலக்கட்டு மேகம் பொல்லா*
*விரித்திடு மேகந் தீர*
*விளம்பக்கேள் மருந்துதானே*

(க - ரை) இவ்விருத்தம் மேகம் இருபதில் சிலவும் அவற்றிற்கு மருந்து சொல்வேனென்பதுங் கூறுகின்றது.

(பொ - ரை) எரிச்சலைச் செய்கின்ற இரத்த மேகம், பொருந்தின சீமேகம், ஆண்குறியில் மரிப்பதற்கேதுவாய் வரும் மேகப் புண்ணால் வருத்தஞ்செய்கின்ற கிரிச்சரநோய் பாளை (கீற்றுநோய்) நிலத்திலிருக்கின்ற துள்ளிமேகம், நீர்கட்டு மேகம், கொடியவைகளான மேலே விவரிக்கரிக்கப்பட்ட மேகநோய்கள் தீர்வதற்கு மருந்து சொல்லக்கேள்

## மேகம் இருபதுக்கும் பறங்கிப்பட்டை ரசாயனம்

*விளம்பிய பறங்கிப் பட்டை*
*மேவுகந் தகஞ்சா திக்காய்*
*களம்பெறு கிராம்பு நாகம்*
*கர்ப்பூரம் சாதி பத்திரி*
*தளம்பெறு மசுவ கந்தி*
*தழல்கொடி வேலிமாஞ்சில்*
*இளம்புசர்க் கரைநெய் கூட்டி*
*இதமுட னுட்கொள் வாயே.*

(க - ரை) இவ்விருத்தம் மேகம் இருபதுக்கும் பறங்கிப் பட்டை ரசாயனம் செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) சொன்ன பறங்கிப் பட்டை, பொருந்திய நெல்லிக்காய்க் கந்தகம், சாதிக்காய், கறுத்த இலவங்கம், சிறு நாகப்பூ, பச்சைக் கர்ப்பூரம், சாதிபத்திரி, வலிய அமுக்கனாங்கிழங்கு, சித்திரமூல வேர்ப் பட்டை, சடாமாஞ்சில் இவற்றை வெய்யிலில் வைத்து உலர்த்திப் பொடியாக்கி வடிகட்டி அத்தூளில் சரி வெள்ளைச் சர்க்கரை சேர்த்து நெய்விட்டுப் பிசைந்து வைத்துக் கொண்டு நன்மையோடு உள்ளுக்குக் கொள்ளுவாய்.

மருந்தளவு முதலியவைகளை வழக்கத்திற் கண்டு கொள்க.

## காமாலை.

*இதமுறு வாதம் பித்தம்*
*இசைந்தசேத் துமகா மாலை*
*பதமுறு மழற்கா மாலை*
*பாண்டு வீங்கிய காமாலை*
*நிதமுறு வரட்கா மாலை*
*நிறமஞ்சள் நீர்க்கா மாலை*
*சிதமுறு தொந்தத் தாலே*
*சேர்ந்தகா மாலைதானே.*

(க - ரை) இவ்விருத்தம் காமாலை நோயின் வகைகளைச் சொல்லுகின்றது.

(பொ - ரை) உடற்கு இன்பம் விளைவிக்கின்ற வாத காமாலை, பித்த காமாலை பொருந்தின சேத்தும காமாலை அழற் காமாலை, பாண்டு காமாலை, வீங்கிய காமாலை, அழியாத வரட்காமாலை, மஞ்சணீர்க் காமாலை, தலப்புக் காமாலை முதலியவைகளாம்.

## முக்கடு சிட்டப்பொடி

*சேர்ந்தகா மாலைக் கெல்லாஞ்*
*சிறந்தரப் பொடியுஞ் சிட்டம்*
*சார்ந்திடு கடுக்காய் நெல்லி*
*தான்றிசீ ரகமிரண்டும்*
*போந்த வெள்ளுள்ளி காந்தம்*
*புகழிந்து காயஞ் சுக்கு*
*தூர்ந்ததிப் பிலிம ரீசம்*
*தொகுத்துமே பதத்தா லீயே.*

(க - ரை) இவ்விருத்தம் முன்சொன்ன காமாலை நோய்களுக் கெல்லாம் முக்கடு சிட்டப் பொடி (திரிகடுகாதி மண்டூரம்) செய்யும் வழி சொல்லுகின்றது.

(பொ - ரை) உயர்ந்த இரும்பரப்பொடி, நாள் சென்ற இரும்புச் சிட்டம், பொருந்திய கடுக்காய்த் தோல். நெல்லிவற்றல்., தான்றிக்காய்த் தோல், கருஞ் சீரகம், சீரகம், வெள்ளைப் பூண்டு, ஊசிக் காந்தம், இந்துப்பு, பெருங்காயம், தோல் சீவின சுக்கு, சிறு திப்பிலி, மிளகு இவைகளை யெல்லாம் பொடி பண்ணி வடிகட்டித் துணை மருந்துகளில் சேர்த்துக் கொடுக்க வேண்டும்.

காலவளவு, மருந்தளவு, பத்தியம் முதலியவை வழக்கத்தில் தெரிந்துகொள்க.

## இரண நோய்கள்.

*பதமுறு சூலைப் புண்கள்*
*பகர்ந்திடு கடிவி காரம்*
*இதமுறு பெருவி யாதி*
*யிசைந்திடுங் குட்டரோகம்*
*சதமுறு தேமல் மேனி*
*தளருந்தா மரைகை வெள்ளை*
*நிதமுறு சொரி சிரங்கு*
*நெகிழ்த்திடு மருந்து கேளே.*

(க - ரை) இவ்விருத்தம் இரண நோய்களின் வகைகளையும் அவற்றின் மருந்து சொல்லுகிறேன் என்பதையும் சொல்லுகின்றது.

(பொ - ரை) காலில் வரும் சூலைப் புண்கள், காணாக்கடி, காண்கடி இவற்றினாலுண்டாகும் விகாரங்கள், பெருநோய்கள், குறை நோய்கள், உடலின்மேல் வரும் தேமல்நோய்கள், தாமரைநோய்கள் (செம்படைகள்) கைவெளுத்தல், சொரி, சிரங்கு முதலியவைகளை இளக்கி யோட்டுகின்ற மருந்துகள் சொல்லக் கேட்பாய்.

## இரணங்களுக்கு நீரெட்டிவிரை குடிதயிலமும் பூசுதயிலமும்

நிகழ்த்துநீ ரெட்டி வித்து
நேர்படுஞ் சூதம் லிங்கம்
தகர்ந்தநெல் லிக்காய்க் கந்தி
தாரமுந் துருசு துத்தம்
புகர்த்தநெய் வார்த்தெ ரை(ரி)த்துப்
பொருந்தநாற் பதுநாள் கொள்ளத்
தகர்த்திடுஞ் சாம்பிராணித்
தயிலஞ் செய்துடம்பிற் பூசே.

(க - ரை) இவ்விருத்தம் இரணங்களுக்கு நீரெட்டி விரை குடித் தயிலஞ் செய்யும் வழியையும் மேலுக்குச் சாம்பிராணித் தயிலம் பூசவேண்டும் மென்பதையுஞ் சொல்லுகின்றது.

(பொ - ரை) மருந்து நூலிற் சொல்லப்படுகின்ற நீரடி முத்து, சுத்தி செய்யப்படும் இரசம், இலிங்கம், தூய்மை செய்த நெல்லிக் காய்க் கந்தி, தாளகம் மயில் துத்தம், பால் துத்தம், இவ்வேழு சரக்குகளையும் வகைக்குக் கால்பலம் எடுத்துப் பத்துப்பலம் நெய்யிலிட் டெரித்து வடித்து நாற்பதுநாள் உள்ளுக்குக் கொண்டால் மேற்படி இரண நோய்களைத் தீர்த்து விடும். உடம்புக்கு மேல் சாம்பிராணித் தயிலஞ் செய்து பூசவேண்டும்.

## சாம்பிராணித் தயிலம்

துலங்குகின்ற சாம்பிராணித் தயிலங் கேளாய்
சுத்தநிறம் பளிங்குபோல் கட்டி வாங்கி
இலங்குகின்ற பாக்கைப்போல் நருக்கிக் கொண்டே
யிதமான குண்டுசட்டி யடுப்பி லேற்றிக்
கலங்காமற் சட்டியிற் றண்ணீரை விட்டுக்
கசகாமற் குண்டுசட்டிக் குள்ளே வைத்து
மலங்காமற் சாம்பிராணிப் பொடியை நன்றாய்
மக்களே யதிற் கூட்டிக் சுற்றி வையே.

வைத்திடு நீ மேற்சட்டி மல்லாத்தி வைத்து
வாய்மட்டுங் கீழவே மண்சீலை செய்து
மெய்த்திடவே மெதுவாகத் தீயெரித்து
மேற்சட்டி தண்ணீரைத் துழாவிக் காம்பால்
எய்த்திட்டுப் போகாமற் கிண்டிக் கிண்டி
இதமாகக் கடிகையொன் றெரித்துப் பின்னும்

கைத்திட்ட மாகவே தானிறக்கி வைத்துக்
கசிந்துவிழும் தயிலமதைக் கண்டு கொள்ளே.

என்பதா லறிக.

## கழுத்தின்மேல் நோய்

பூசிய கபால சூலை
பொருந்து பீநசநீர்த் தும்மல்
நாசிகா பீடரோகம்
நாற்றமுந் தின்னுங் குட்டம்
தேசிகங் காதிற் சீயும்
சேர்ந்திடுங் கபால வாயு
காசினித் தொந்த ரோகம்
கரந்திட மருந்து கேளே.

(க - ரை) இவ்விருத்தம் கழுத்தின் மேலுள்ள கருவிகளிலுண்டாகும் நோய்களின் வகைகளையும், அவற்றிற்கு மருந்து சொல்வேன் என்பதையுங் கூறுகின்றது.

(பொ - ரை) கபாலசூலை, பொருந்தின பீநச வகைப்பட்ட நீர்த்தும்மல், நாசிகா பீடநோய், நாற்ற பீநசம், மூக்குத் தின்னும் பீநசம், காதில் சீவடித் தலையுடைய கபாலவாயு, இவைகள் கலந்த நோயும் தீர்மருந்து சொல்லுகின்றேன் கேட்பாயாக.

## கழுத்தின் மேல் நோய்களுக்குப் பெருமருந்துப் பொடி

கரந்திடும் பெருமருந்து
கண்டங்கத் தரியுஞ் சுக்கு
சுரந்திடுஞ் செங்கத் தாரி
தோன்று சீரகமிரண்டு
பரந்திடு கடுகு ரோணி
பகர்சங்க மரத்தை கூட்டி
நிரந்தரஞ் சூர்ணந் தின்ன
நீங்குமேல் நோய்கள் தானே.

(க - ரை) இவ்விருத்தம் கழுத்தின்மேல் கருவிகளில் உண்டாகும் நோய்கள் தீரப்பெருமருந்துப் பொடி செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) பெருமருந்து, கண்டங்கத்திரி, தோல் சீவின சுக்கு,

செங்கத்தாரிப்பட்டை, சீரகம், கருஞ்சீரகம், கடுகுரோகணி, சங்கம் பட்டை, சன்ன ராஷ்டம், இவைகளை ஒரே அளவாக எடுத்திடித்து வடிகட்டிச் (சர்க்கரை கலந்து) தின்றால் மேலே சொல்லபட்ட நோய்கள் நீங்கிப்போகும்.

மருந்தளவு, நாளளவு, பத்தியம் முதலியவற்றை வழக்கத் திலுணர்ந்து கொள்க.

## கழுத்தின்மேல் நோய்களுக்குக் குளிதயிலம்

*நீங்குகார்த் திகைக் கிழங்கு*
*நிலக்குமிழ் தசமூலந்தான்*
*பாங்குறு மஞ்சள் மூன்று*
*பகர்குப்பி கடுகு ரோணி*
*தேங்கு சாரடை யெருக்கு*
*சேர்கொடி வேலி சீந்தில்*
*பாங்குநல் லெண்ணெய் சேர்த்துப்*
*பருவமா யெரித்து மூழ்கே.*

(க - ரை) இவ்விருத்தம் கழுத்தின்மேற் கருவிகளிலுண்டாகும் நோய்களுக்குக் குளிதயிலம் செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) கார்த்திகைக்கிழங்கு, நிலக்குமிழ் வேர், வில்வவேர், பெருங்குமிழ்வேர். நெருஞ்சில் வேர், முன்னைவேர், சிற்றாமல்லிவேர். பேராமல்லி வேர், சிறுவழுதுணைவேர், கண்டங்கத்திரிவேர், பாதிரி, பெருவாகைகளாகிய பத்துவேர்களும், பசுமஞ்சள், கறிமஞ்சள், மரமஞ்சள், சதகுப்பி, கடுகுரோகணி, சத்திச் சாட்டரணைக்கிழங்கு, எருக்கம்வேர், சித்திர மூலவேர்ப்பட்டை, சீந்தில்கொடி இவைகள் தனித்தனிக் கால்பலம் எடுத்துத் தூள்செய்து, நல்லெண்ணெய் ஒரு வீசையில் சேர்த்துத் தயில பக்குவத்தில் காய்ச்சிவடித்து நான்கு நாட்கொருக்கால் முழுகிவர வேண்டும்.

கார்த்திகைக் கிழங்கென்பது செங்காந்தள். இது கார்த்திகைத் திங்களில் பூக்கின்றமையின் அக் கிழங்குக்குக் கார்த்திகைக் கிழங்கென்று பேர் வந்தது. இதுவே கலப்பைக் கிழங்குச் செடியென்றுணர்க. இதையே கோடல் எனவும், கண்ணோய்ப்பூ எனவும், தோன்றி எனவும் கூறுவர்.

இதன் வகைகளெல்லாம் பொருளிலக்கணத்திலும் அச்சார் பாயுள்ள நூல்களிலுங் காணலாம்.

இது கார்த்திகைத் திங்களிலும் பூக்கும் என்றதை

*"நலமிகு கார்த்திகை நாட்டவரிட்ட*
*தலைநாள் விளக்கிற்றகையுடையவாகிக்*

*குலமெலாம் பூத்தனதோன்றி சிலமொழி*
*தூதொடு வந்த மழை"*

எனக்கார் நாற்பதிலும் காண்க.

தசமூலங்கள் இவை என்றதை.

*" வில்வம் பெரியகுமிழ் மென்னெருஞ்சில் முன்னையிரு*
*மல்லி சிறிய வழுதுணைவேர் - நல்கண்டங்*
*கத்தரி புன்காலிபெருவாகையிவை வன்னோயைக்*
*குத்துந் தசமூலங்கூறு"*

என்னும் வெண்பாவாலறிக.

## கவிசை.

*பருவமாங் கவிசை யோடு*
*பக்கவிப் புருதி கோவை*
*உருவமாம் பிலீக வீக்கம்*
*உதரத்தின் சூலை யன்றிக்*
*கருவதை யழிக்குங் கர்ப்பக்*
*கட்டிவிப் புருதி யோடு*
*பெருவயிறுடனே மற்ற*
*பெருமகோ தரமுந்தானே.*

(கு - ரை) இவ்விருத்தம் கவிசை வகைகளைக் கூறுகின்றது.

(பொ - ரை) ஓடு விப்புருதி, பக்க விப்புருதி, நீர்க்கோவை விப்புருதி, காய்ச்சல் கட்டி, வயிற்றிற் சூலை அன்றிப் பிள்ளையை யழிக்கும் கர்ப்பவிப்புருதி, பெருவயிறு, பெருமகோதரம் என்பவை களாம்.

இவற்றின் விரிவை யூகிமுனி சிந்தாமணி 800ல் காண்க.

## பேய்த் துமட்டிக்காய் எண்ணெய்

*பெருத்த பேய்த்தும் மட்டிக்காய்*
*பேய்ச்சுரை வெண்காக் கட்டான்*
*திருத்தமாம் லவண மைந்தும்*
*சேர்ந்திடு சார மைந்தும்*
*வருத்தமா விலிங்கு கொன்றை*
*வச்சிரத் தின்பால் மூலம்*
*கருத்துறு வசம்பு மஞ்சள்*
*காயம் வெள்ளுள்ளி கூட்டே.*

(க - ரை) இவ்விருத்தம் பேய்த்தும்மட்டிக்காய் எண்ணெய் செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) பெரிய அளவாயுள்ள பேய்த்தும்மட்டிக்காய், பேய்ச்சுரை, வெள்ளைக்காக்கட்டான், தூய்மை செய்த அஞ்சுப்புகள், பொருந்துகின்ற ஐந்து சாரங்கள், மாவிலிங்கப் பட்டை, கொன்றைப் பட்டை, சதுரக் கள்ளிப்பால், அதன் வேர்ப்பட்டை, வசம்பு, மஞ்சள், காயம், வெள்ளைப்பூண்டு இவைகளைச் சேர்ப்பாய்.

ஐந்துப்புகளாவன :-

கரியுப்பு, இந்துப்பு, வளையலுப்பு, கல்லுப்பு, வெடியுப்பு என்பன. இதை.

*"வள்ளிய கரியுப்பிந்து*
*வளையுப்பு கல்லுப்போடு*
*தெள்ளிய வெடியுப் பைந்தே"*

என நிகண்டாலறிக

ஐந்துசாரங்களாவன :-

நவாச்சாரம், சத்திசாரம், உமரிசாரம், எவாச்சாரம், வடசாரம் என்பன. இதை,

*"நவச்சாரம் சத்திசாரம்*
*நாட்டினி லுமிரிசாரம்*
*எவச்சாரம் வடசாரங்கள்*
*என்பவை பஞ்ச சாரம்"*

என நிகண்டாலறிக.

## (இதுவுமது)

*காயநற் சிவதை போளங்*
*காட்டினா மணக்கின் வித்தும்*
*வாயரோ கணிமு ருங்கை*
*வள்ளிமா வவிரி சின்னி*
*பாயுறு கழற்சி கொத்தான்*
*பகரும்வே லிப்ப ருத்தி*
*தேய்விளக் கெண்ணெய் பாலும்*
*சேர்த்தெ ரித்துள்ளே கொள்ளே.*

(க - ரை) இவ்விருத்தம் பேய்த்தும்மட்டிக் காய் நெய் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

(பொ - ரை) உயர்ந்த நரம்பெடுத்த சிவதை வேர், கரியபோளம், காட்டாமணக்கு விரை, பொருந்திய கடகரோகணி, முருங்கைப் பட்டை, வள்ளிக் கிழங்கு, வளமான அவிரி, சிறுசின்னி, கழற்சிப் பட்டை, கொத்தான் கொடி, சொல்லுகின்ற உத்தாமணிவேர் ஆகிய இச்சரக்குகளை யெல்லாம் வகைக்குக் கால்பலமாக எடுத்து இடித்து ஆமணக் கெண்ணெய் ஒரு வீசையும் சதுரக் கள்ளிப்பால் கால் படியுமாகக் கூட்டி அதில் இத்தூளைப் போட்டுக் காய்ச்சி எண்ணெய்ப் பக்குவத்தில் வடிகட்டிக் குடித்தால் மேற்சொன்ன நோய்கள் நீங்குவனவாம்.

எண்ணெயளவு, நாளளவு பத்தியம் முதலியவை உடல்வன்மை, மென்மைகளுக்கும், நோய் வன்மை மென்மைகளுக்கும், காலத்திற்கும் தக்கவாறு மருத்துவர்கள் வழக்கத்திற் றெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும் என்றறிக.

## ருத்து நோய்

*சேர்த்திடு மிருத்து ரோகம்*
*செய்யநெஞ் சருக்கல் குன்றல்*
*பார்த்திடு மூர்ச்சை வாயு*
*பயித்திய வாயு மெய்யில்*
*சார்த்திடு முதர வாயு*
*சருவாங்க வாயு மூலம்*
*ஏற்றிடும் வாயுவுக் கெல்லாம்*
*இசைந்தநல் மருந்து கேளே.*

(க - ரை) இவ்விருத்தம் ருத்து நோயின் வழிகளைக் கூறுகின்றது.

(பொ - ரை) ருத்து நோயானது. மார்பின் துளையைச் சுருக்கல், குறைத்தல், மூர்ச்சையாக்குகின்ற வாயு, பித்த வாயு, உடம்பில். சேர்த்துகின்ற உதர வாயு, (வயிற்று வலி) சர்வாங்க வாயு, (உடல் முழுவதும் வலி) மூலம், ஆகச் சொல்லப்படும், இவ்வாயுக்களுக்கெல்லாம் பொருந்திய உயர்ந்த மருந்தொன்று சொல்லுகிறேன் கேட்பாயாக.

ஹ்ருத் வடமொழி, துளை என்று பெயர், இதுவே ஹ்ருதயம் என வந்தது. இதனையே தமரக வாயு வென்பர் தமிழர். தமரகம் - துளை. இதனைச் சித்தர் நூல் ருத்திர ரோகம் எனத் தொழில் மேலேற்றிக் கூறுகின்றது.

## ருத் நோய்க்குச் சீரக ரசாயனம்

இசைந்தசீ ரகமி ரண்டும்
இயல்திரி கடுகு மூலம்
அசைந்தநற் சித்திர மூலம்
ஆந்திரி பலையு மிந்து
பிசைந்தவாய் விளங்கங் காயம்.
பெருத்திடு சவுட்டு மண்ணும்
கசந்தரோ கணியுந் தேனும்
கலந்துண்ண நோய்கள் போமே.

(கு - ரை) இவ்விருத்தம் ருத்நோய்க்குச் சீரக ரசாயனம் செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) பொருந்தின நற்சீரகம், கருஞ்சீரகம், தூய்மை செய்த சுக்கு, மிளகு, திப்பிலி, திப்பிலிக் கட்டை., வாயு ரோகங்கள் நீங்கக் காரணமான சித்திரமூல வேர்ப்பட்டை, கடுக்காய்த் தோல், நெல்லி வற்றல், தான்றிக்காய்த் தோல், இந்துப்பு வாய்விளங்கம், பெருங்காயம், சவர்க்காரம், கடுகு ரோகணி இவைகள் ஒரே அளவாக எடுத்திடித்துக் கட்டித் தேனில் கலந்து சாப்பிட்டால் மேற் கண்ட ருத் நோய் போய் விடும்.

மருந்தளவு, நாளளவு முதலியவைகளை வழக்கத்தி லுணர்ந்து கொள்க.

## இரத்தநோய்

கலந்திடு மிரத்த வாந்தி
கனரத்த ரோக நெஞ்சில்
புலர்ந்திடு மிரத்த பித்தம்
பொருந்திய கயகா சங்கள்
மலர்ந்திடும் பெரும்பாட் டோடு
வளரெலும் புருக்கி சூலை
நலிந்திடு புண்ணுந் தீர
நாரியே மருந்து கேளே.

(கு - ரை) இவ்விருத்தம் இரத்தநோயின் வகைகளையும் அவற்றிற்கு மருந்து சொல்லுகிறேன் என்பதையும் சொல்லுகின்றது

(பொ - ரை) உடலிற் சேர்ந்திருக்கிற இரத்த வாந்தி, உயர்ந்த இரத்த நோய், நெஞ்சில் உலர்ந்து வருகின்ற இரத்தபித்தம், அத்துடன் இயைந்த கயம், காசங்கள், மிகுதிப்பட்ட பெரும்பாடு, எலும்புருக்கி, சூலை, வருந்துதற் கேதுவான புண்ணோய் ஆகிய இவைகள் தீரப் பெண்ணே! மருந்து சொல்கிறேன் கேட்பாயாக.

இரத்த ரோகந்தவிர மற்ற நோய்கள் வெளிப்படை. ஆயினும் அவற்றை முடிந்த நூலிற் கண்டு கொள்க.

இரத்த ரோகக் குறியாவது அடிக்கடி குத்திக் குத்தி யிருமல், கோழை வெளிப்படுதல், உடம்பு இளைத்தல், வாய் வழுவழுப்போடு உலர்தல், வயிற்றிற் பசிகுறைதல், அன்றி வயிறு ஒட்டிக்கொள்ளல், நாளுக்கு நாள் கெடுதியே யடைதல் என்னும் இவைகளாம் இதனை,

*"அண்டியே யிருமல் குத்தியடிக்கடி சிலேஷ்மந்தள்ளி*
*மண்டியே யுடலம்வற்றி வழுவழுத் துலர்ந்து வாயும்*
*பண்டியுஞ் சுருங்கிநாளும் பதங்கெட வருமே யானால்*
*உண்டில்லை யெனுமிரத்த ரோகமென்றுரைக்கலாமே"*

என வியாசமருத்துவத்திலுள்ளது காண்க.

## இரத்தநோய்க்குத் தண்ணீர்விட்டான் நெய்

*நாரியே தண்ணீர் மிட்டான்*
*நல்லத்தி யரசால் வித்து*
*பாரிய பனையுஞ் சீந்தில்*
*பகர்முத்தஞ் சாதிக்காயும்*
*சீரிய கிராம்பு பத்திரி*
*திரவிய மைந்துங் கூட்டிக்*
*கூரிய நெய்யிற் செய்து*
*கொடுத்திட ரோகம் போமே.*

(க - ரை) இவ்விருத்தம் தண்ணீர் விட்டான் கிழங்கு நெய் செய்யும் வழியையும், தீரு நோயையுங் கூறுகின்றது.

(பொ - ரை) பெண்ணே! தண்ணீர் விட்டான் கிழங்கு, நாள் சென்ற அத்தி விரை, அரசம் விரை, ஆலம் விரை, முதிர்ந்த நிலப்பனங் கிழங்கு, சீந்தில் கொடி, சொல்லப்படுகின்ற கோரைக்கிழங்கு சாதிக்காய், சிறந்த இலவங்கம், இலவங்கப்பத்திரி, ஐவகைத் திரவியங்கள் ஆகிய இவைகளை யெல்லாம் நெய்யில் பொடி பண்ணவேண்டியதைப் பொடி பண்ணியும், அரைக்கவேண்டியதை அரைத்துப் போட்டுப் பக்குவம் வரக்காய்ச்சி மேற்கண்ட நோயுள்ளவர் களுக்குக் கொடுத்தால் மேற்படி நோய் தீரும்.

ஐவகைத் திரவியமாவன :- மிளகு, கோஷ்டம்,அகில், தக்கோலம், குங்குமப்பூ என்பன

நெய்படித்துபலஞ் சேர்த்தால் சரக்குகள் தனித்தனிக் கால் பலஞ் சேர்க்கவேண்டு மென்றறிக.

நாளளவு, மருந்தளவு, பத்தியம் முதலியவை நோயாளியின் உடல்

வன்மைக்கும், நோய் வன்மை மென்மைகளுக்குந் தக்கவாறு கொள்க.

## சுரக்குடி நீர்

கொடுத்திடு சுரத்துக் கெல்லாம்
    கூறிய மிச்சஞ் சீந்தில்
எடுத்தகாஞ் சோரி முத்தம்
    இசை பர்ப்படாக முட்டி
மடுத்திட வேம்பு கோட்டம்
    வளர்கண்டங் காரி தேக்கு
தடுத்ததிப் பிலியுஞ் சுக்கு
    தன்னுடன் குடிநீர் கொள்ளே.

(க - ரை) இவ்விருத்தம் சுரநோய்க்குக் குடிநீர் செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) எவ்வகையான சுரத்துக்கும் மருந்து நூலிற் சொல்லப்பட்ட விலாமிச்சம்வேர், சீந்தில் கொடி, சுரத்திற்கென்றெடுத்த சிறு காஞ்சோரி, கோரைக்கிழங்கு, பொருந்தின பர்ப்பாடகம், சிற்றா முட்டி, எவ்வகைச் சுரத்தையும் நீக்கு நிலவேம்பு, சாதி கோஷ்டம், வளர்கின்ற கண்டங்கத்தரி, கண்டுபாரங்கி, ஐயமறத்தடுத்த திப்பிலி, தோல் சீவினசுக்கு இவைகளையெல்லாம் ஒரு எடையாக எடுத்து எட்டுப் பங்கு தண்ணீர்விட்டு ஒருபங்காகக் குறையும்படி காய்ச்சி வடிகட்டி அக்குடி நீரை 3, 5, 7 நாள் அளவாகக் குடித்தால் எவ்வகையான சுரமும் தீரும்

## சந்நிகளுக்கு நசியம்

தன்னுடன் சந்நிக் கெல்லாந்
    தயங்கிய முசிறு முட்டை
மன்னுபூ நாகத் தோடு
    வளர்ந்திடுங் கடுகு காயம்
சொன்னதிப் பிலிமுலைப்பால்
    துலங்கிய விஞ்சிச் சாறு
முன்னமே வசம்போ டுள்ளி
    மூக்கினி னசியம் பண்ணே.

(க - ரை) இவ்விருத்தம் (சந்நிகளுக்கு) முழுச் சுரத்திற்கு நசியம் செய்யும் வழியைச் சொல்லுகின்றது.

(பொ - ரை) உடம்பினுடன் கலந்து வருகின்ற சந்நி வகைகளுக்கெல்லாம் முயிறுமுட்டை, பூநாகம், கடுகு, பெருங்காயம், திப்பிலி, வசம்பு, வெள்ளைப் பூண்டு இவைகளை ஒரு எடையாக

எடுத்து இடித்து ஒரு துணியில் சிறு மூட்டையாகக் கட்டி ஒரு மட்சட்டியில் இஞ்சிச்சாறும் முலைப்பாலும் ஒரு அளவாகக் கலந்துவைத்து அதில் இந்த மூட்டையை ஊரவைத்து எடுத்து அதை மேற்படி சந்நி நோயால் வருத்தப்படுகிறவன் மூக்கில் பிழிவாய். அப்படி பிழிந்தால் இரண்டு மூன்று வேளைகளில் மேற் சொல்லப் பட்ட சந்நி நோய் தீர்ந்து விடும்.

இந் நசியம்பிழி மருந்தின் வகை யென்றுணர்க.

## சுரசந்நி மாத்திரை

*பண்ணிய விருவி நாபி*
*பகர்ரசங் கந்த கந்தான்*
*நண்ணிய காரங் காந்தம்*
*நலத்திடு தாரம் வாளம்.*
*குண்ணிய சிலைகி ராம்பு*
*கூறிய மிளகு சுக்கு*
*எண்ணுதிப் பிலியிஞ் சிச்சாற்*
*றிதுசுர சந்நி போமே.*

(க - ரை) இவ்விருத்தம் சுரத்திற்கும், சந்நிக்கும் சுரசந்நி மாத்திரை செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) தூய்மை பண்ணின இருவி, நாபி சொல்லப் படுகின்ற இரசம், கந்தகம், பொரித்த வெங்காரம், தூய்மை செய்த காந்தம், நன்மையான தாளகம், வாளம், மனோசிலை, இலவங்கம், மிளகு, தோல் சீவின சுக்கு, சிறுதிப்பிலி இவைகளை ஒரு எடையாக எடுத்து இடித்து வடிகட்டிக் கல்வத்திட்டு இஞ்சிச்சாற்றால் நன்றாயரைத்து மிளகளவு மாத்திரை செய்தால் இதன்பேர் சுரசந்நி மாத்திரையாகும். இதைக்கொடுத்தால் சுரம், சந்நி ஆகிய நோய்கள் தீரும்.

இதைக் கையாடும் வழி இச் செய்யுளில் கூறப்படாமையில் மருத்துவர்கள் அதன்வழிகளை யெல்லாம் வழக்கத்திற் கண்டுணரக் கடவர்.

## ஐவகை வலிகட்கு நசியம்

*இதுமுதல் குமர கண்டன்*
*இசைந்திடு முயல கண்டன்*
*மதுவுடன் குதிரை மேவும்*
*வலிப்புடன் பல்வ லிப்பு*

பதுமமா மவிரிச் சாறு
பார்வசம் புள்ளி கூட்டி
முதிரவே நசியம் பண்ண
மொழிந்திடி லோடிப் போமே.

(க - ரை) இவ்விருத்தம் வலிகள் ஐவகை என்பதையும் அவற்றிற்கு நசியம் பண்ணும் வழியையும் கூறுகின்றது.

(பொ - ரை) முதல் குமர கண்டன் வலியும், பொருந்தின முயல கண்டன் வலியும், குதிரைவலியும், இன்னும் பலவகை வலிகளும் வசம்பு, வெள்ளைப் பூண்டு இவைகளைச் சமமாக எடுத்திடித்து அவிரிச் சாற்றிற் சேர்த்து ஊறின நீரை நோயாளியின் மூக்கில் விட்டால் மேற்கண்டவலிகள் தீர்ந்தோடிப் போய் விடும்.

## மேற் பூசுந் தயிலம்

ஓடிய சர்ப்பத் தோலும்
உள்ளியும் வசம்பு தாரம்
நாடிய கவுரி நாபி
நலந்திகழ் காயம் போளம்
தேடிய மஞ்சள் மூலம்
திரண்டமா விலிங்கு வாகை
சூடிய பெரும ருந்து
சொல்சிறு குறிஞ்சான் கூட்டே.

(க - ரை) இவ்விருத்தம் ஐவகை வலிகளுக்கு மேலுக்குப் பூசும் சர்ப்பத்தோல் தயிலம் செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) பாம்புரித்த தோல், வெள்ளைப் பூண்டு, வசம்பு, அரிதாரம், கவுரிப் பாஷாணம், நாபி, பெருங்காயம், கரிய போளம், மஞ்சள், திப்பிலிக் கட்டை, மாவிலிங்கப் பட்டை, வாகைப்பட்டை பெருமருந்துப்பட்டை சிறு குறிஞ்சான் இவைகளும் :

## தொடர்ச்சி

சொல்லிய வெருக்கு புன்கு
துலங்கிய முருங்கை வேரும்
மல்லிகை சதுரக் கள்ளி
மரமஞ்சள் நெறி யரிசிப்பால்
புல்லிய எண்ணெ யைந்தும்
புகலுங்குக் குடத்தி னண்டம்
கல்லிய பதம தாக்கிக்
கருத்துடன் மேலே பூசே.

(கு - ரை) இவ்விருத்தம் மேற்றயிலஞ் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

(பொ - ரை) எருக்கம் பட்டை, புங்கம்பட்டை, முருங்கை வேர், மல்லிகை, சதுரக் கள்ளிப்பட்டை, மர மஞ்சள், நெறியரிசிப் பால், இவைகளெல்லாம் தனித்தனி வகைக்குப் பலம், ஒன்றாக எடுத்துத் தூளாக்கி, எள்ளெண்ணெய், இலுப்பை எண்ணெய், ஆமணக்கின் எண்ணெய், புங்கெண்ணெய், வேப்பெண்ணெய், இவைகள் வகைக்கு வீசை ஒன்று எடுத்து இதில் அப்பொடியைச் சேர்த்துப் பத்துக் கோழி முட்டையை உடைத்து ஊற்றிப் பதமாய்க் காய்ச்சி யிறுத்து மேலுக்குப் பூசுவாய். அப்படிப் பூசினால் மேற்படி ஐவகை வலிகள் நீங்கும்.

## கரப்பான் நோய்

கருத்துறு புடைக ரப்பான்
கருங்கொள்ளிக் கரப்பான் வீங்கி
வருத்திடுங் கரப்பான் பித்த
வாதசேத் துமக ரப்பான்
பருத்திடுஞ் செங்க ரப்பான்
பலத்ததோ ரரிக ரப்பான்
திருத்தமாங் கரப்பா னெல்லாந்
தீர்ந்திட மருந்து கேளே.

(கு - ரை) இவ்விருத்தம் கரப்பான் வகைகளும் அவற்றிற்கு மருந்து சொல்லுகிறேன் என்பதுங் கூறுகின்றது.

(பொ - ரை) மனத்தில் மிக்க துன்பத்தைத் தருகின்ற புடை கரப்பான், கருங்கொள்ளிக் கரப்பான், வீங்கி வருத்தஞ் செய்கின்ற வீக்கக் கரப்பான்,பித்தகரப்பான், வாதகரப்பான், சேத்ம கரப்பான், செங்கரப்பான், வன்மையுள்ள அரிகரப்பான் ஆகிய திருத்தமான கரப்பான்களெல்லாந் தீர்ந்து போய் விட மருந்து சொல்கிறேன்., மாணாக்கனே ! நீ அதைக் கேட்பாயாக.

## செங்கத்தாரி நெய்.

தீர்ந்திடு செங்கத் தாரி
சேர்கரு நொச்சி கொத்தான்
சார்ந்திடு கழற்சி புன்கு
சங்கொடு சங்கங் குப்பி
போந்திடு கிரந்தி நாயன்
புகழ்செருப் படியுஞ் சின்னி
கூர்ந்தவே லிப்ப ருத்தி
கொடியவெள் ளறுகு கூட்டே.

(கு - ரை) இவ்விருத்தம் செங்கத்தாரி நெய் செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) முதிர்ந்த செங்கத்தாரி, கருநொச்சி, கொத்தான் கொடி, கழற்கொடி, புன்கம் பட்டை, நற்சங்கம் பட்டை, சங்கங் குப்பி சமூலம், கிரந்தி நாயகம், செருப்படி, சின்னி, உத்தாமணி, வெள்ளறுகு ஆகிய இவைகளும்:

## தொடர்ச்சி

*கூடுவேம் பாடம் பட்டை*
*கூறிய சிவனார் வேம்பு*
*தேடுறு சிவதை மூலம்*
*தேறிய கண்டங் காரி*
*போடுறு கடுக்காய் ரோணி*
*பூதத்தின் கரப்பான் பட்டை*
*வேடுறு சீரமி ரண்டும்*
*விளக்குநெ யெரித்துக் கொள்ளே.*

(கு - ரை) இவ்விருத்தம் செங்கத்தாரி நெய் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

(பொ - ரை) முன் சொன்னவற்றுடன் வேம்பாடம் பட்டை. சிவனார் வேம்பு, சிவதை வேர், கண்டங்கத்தரி, கடுக்காய்த் தோல், கடுகுரோகணி, பூதகரப்பான் பட்டை, நல்லசீரகம், கருஞ்சீரகம் இவைகளெல்லாம் வகைக்கு ஒரு பலமாக எடுத்திடித்து வடிகட்டி ஆமணக்கெண்ணெய் ஒரு வீசையில் போட்டுப் பக்குவமாக எரித்து (நோய் வன்மை, உடல் வன்மைக்குத் தக்கபடி) நோயாளிக்குக் கொடுத்தால் மேற் சொல்லப்பட்ட கரப்பான் நோய்கள் நீங்கும்.

## விடாரிக் குடிநீர்

*கொள்ளவே விடபா கங்கள்*
*கூறிடப் பலவா றுண்டு*
*முள்ளிது துளைநா ரத்தை*
*முற்றிய கொன்றை நொச்சி*
*கள்ளவிழ் பிரமி சின்னி*
*கழற்சிமா மலைநன் னாரி*
*தெள்ளிய கடுக்காய் சுக்கு*
*சேர்த்திட்டுக் குடிநீர் செய்யே.*

(கு - ரை) இவ்விருத்தம் விடபாக நோய்களுக்குக் குடிநீர் செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) விடபாக நோய்களைப்பற்றிச் சொல்லவேண்டு

மானால், அவற்றின் விளக்கம் பலவுள. அவற்றிற்குக் கண்டங்கத்தரி, தூதுவளை, நாரத்தை, கொன்றை, நொச்சி, பிரமி, சிறு சின்னி, கழற்சி, மலைநன்னாரி, கடுக்காய்த்தோல், சீவின சுக்கு, இவைகளை ஒன்றாய்ச் சேர்த்துக் குடிநீர் காய்ச்சி 3, 5, 7 நாள் வரை நோய் வன்மை, உடல் வன்மை முதலியவற்றை உணர்ந்து கொடுத்தால் மேற்சொன்ன விடபாக நோய்கள் தீரும்.

## கண்டமாலை வகை

*செய்யதோர் கண்ட மாலை*
*சேர்ந்திடும் பவுத்தி ரங்கள்*
*வெய்யவிப் புருதி வீக்கம்*
*மேவிய துடையில் வாழை*
*பய்யபுண் சூலை யோடு*
*பருத்திடும் பிளவை யெல்லாம்*
*துய்யதோ ரரையாப் போடு*
*தொடங்கிய மருந்து கேளே.*

(சு - ரை) இவ்விருத்தம் கண்டமாலை நோயின் வகைகளைக் கூறுகின்றது.

(பொ - ஞ்ர) வன்மையான கண்டமாலை, பவுத்திரங்கள், விப்புருதி, வீக்கம், துடை வாழை, மெலிய புண், சூலை, பருத்த பிளவை, அரையாப்பு ஆகிய இவைகளுக்கு மருந்து சொல்கிறேன். மாணாக்க னாகிய நீ அவற்றைக் கேட்பாயாக.

## கண்டமாலை வகைக்குப் பூச்சு

*தொடங்கிய் வெருக்கு நீலி*
*தோன்று கார்த்திகைக் கிழங்கு*
*மடங்கிய குன்றி யெட்டி*
*வளர்பெரு மருந்து கஞ்சா*
*முடங்கிய வசம்பு காயம்*
*முதிர்வெள்ளை யுள்ளி கூட்டி*
*அடங்கவீக் கத்திற் பூச*
*அடங்கிவா யுடைந்து போமே.*

(சு -ரை) இவ்விருத்தம் கண்டமாலை வகைக்குப் பூசு மருந்து செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) எருக்கு, அவிரி, கார்த்திகைக் கிழங்கு, குன்றி, எட்டி, பெருமருந்து, கஞ்சா, வசம்பு, பெருங்காயம், வெள்ளைப் பூண்டு இவைகளை யெல்லாம் சரி எடை எடுத்துச் சேர்த்தரைத்து வீக்கத்தின் மேல் பூசினால் அவ்வீக்கம் அடங்கி வாய் உடைந்து போகும்.

## தயிலம்

உடைந்துவேப் பெண்ணெ யுள்ளி
யோங்குவேம் பாடம் பட்டை
கடைந்தநற் கந்தி சூதங்
காசுநற் றுருசு துத்தம்
மிடைந்தகுங் குலியந் தார
மிருதாரென் சிங்கி கூட்டி
இடைந்திடி தயிலஞ் செய்யி
லிந்தமா நோய்கள் போமே.

(கு - ரை) இவ்விருத்தம் மேற்படி கண்டமாலை வகைகளுக்கு மேலுக்கு இரணத்தின்மேல் தடவும் தயிலம் கூறுகின்றது.

(பொ - ரை) வேப்பெண்ணெய் ஒரு வீசை, வெள்ளைப்பூண்டு, வேம்பாடம் பட்டை, சுந்தகம், இரசம், காய்ச்சுக்கட்டி, மயில் துத்தம், பால் துத்தம், குங்குலியம், அரிதாரம், மிருதார் சிங்கி இவைகளை வகைக்கு ஒரு பலம் சேர்த்துப் பொடித்து மேற்படி வேப்பெண்ணெயில் போட்டுப் பக்குவமாய் எரித்து வடித்துத் தடவினால் மேற்படி கண்டமாலை வகையிலுண்டான இரணங்கள் ஆறும்.

## கண்ணோய்வகைகள்

இந்தமா நீல காச
மியற்றிடும் பித்த காசம்
வந்தமா படலம் பில்லம்
மயிர்க்குத்து புழுவெட்டோடு
சந்திகா மாலைக் கண்ணுந்
தருநேத்திர வாயு தானும்
நந்திசொல் லினிய மைந்தா
நயந்துரை வகையைக் கேளே.

(கு - ரை) இவ்விருத்தம் கண்ணோய் வகைகளைச் சொல்லுகின்றது.

(பொ - ரை) பெரிய நீலகாசம், பித்தகாசம், படலம், கண் பில்லம், மயிர்க்குத்து, புழுவெட்டு, சந்திகாமாலைக்கண், நேத்திரவாயு இவைகளை நந்தி சொல்லின்படி நான் சொல்ல, மாணாக்கனாகிய நீ நான் விரும்பிச் சொல்லும் வகையைக் கேட்பாய்.

## கண்ணோய்க்கு முத்தாதி மாத்திரை

உரைத்திடு முத்து வெள்ளி
யுயர்ந்ததோர் தாமிரஞ் சங்கு

கரைத்திடு துருசு துத்தம்
கைதலை யோடு பொன்னும்
திரைத்திடு பீத ரோணி
சேர்புன்கு நிம்பச் சாற்றால்
அரைத்திடு கண்ணிற் றொண்ணூற்
றாறுநோ யகன்று போமே.

(கு - ரை) இவ்விருத்தம் கண்ணிலுண்டாகும் நோய்களுக்கு முத்தாதி மாத்திரை செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) சொல்லப்படுகின்ற முத்து, வெள்ளிப் பொடி, உயர்ந்ததான தாம்பிரப்பொடி, ஊதும் சங்கின் பொடி, மயில் துத்தம், பால் துத்தம், தலையோடு, பொன், பீதரோகணி, புன்கம் பருப்பு இவைகளை எலுமிச்சம் பழச்சாற்றாலரைத்திடுவாய். பின்னர் கண்ணில் போடவேண்டிய துணை மருந் (அனுபானத்) துடன் போட்டால் கண்களிலுண்டாகும் தொண்ணூற்றாறு நோய்களும் நீங்கிப் போய் விடும்.

## கண்ணோய்களுக்கு முழுகெண்ணெய்

போமிது பொன்னாங் காணி
புகழ்சிறு கீரை முத்தம்
ஓமிது சீந்தில் நிம்ப
முயருஞ்சண் பகப்பூ நாகம்
ஆமிது மதுரமேலம்
அலருஞ்செங் கழுநீர் கோஷ்டம்
நாமினி சொன்னோ மெண்ணெய்
நற்பதஞ் செய்து மூழ்கே.

(கு - ரை) இவ்விருத்தம் கண்ணோய்களுக்கு முழுகு தயிலம் சொல்லுகின்றது.

(பொ - ரை) பொன்னாங்காணி, சிறுகீரை, கோரைக்கிழங்கு, சீந்தில் கொடி, எலுமிச்சை, சண்பகப்பூ, சிறு நாகப்பூ, அதிமதுரம், ஏலரிசி, செங்கழுநீர்க் கிழங்கு, கோஷ்டம், இவைகளை ஒவ்வொரு பலம் எடுத்திடித்துப் பொடித்து ஒரு வீசை நல்லெண்ணெயிற் சேர்த்துப் பக்குவமாய்க் காய்ச்சி மூழ்குவாய். அப்படி முழுகினால் கண்ணி லுண்டாகும் நோய்கள் யாவும் நீங்கும்.

## எல்லா மருந்துக்கும் விஞ்சை மூலம்

செய்திடு மருந்துக் கெல்லாம்
சிறந்ததோர் விஞ்சை மூலம்

செய்திடு பரிகா ரந்தான்
　　சித்தியாஞ் சகல மெல்லாம்
செய்திடுஞ் சூக்ஷா சூக்ஷும்
　　தேகம் பொன் னிறமதாகும்
செய்திடு வாதத் திற்குச்
　　செப்புவே னாதி யாமே.

(கு - ரை) இவ்விருத்தம் எல்லா மருந்துக்கும் விஞ்சை மூலம் செய்கிறது சொல்லுவதாகக் கூறுகிறது.

(பொ - ரை) உலகத்தில் மருத்துவர்கள் செய்கிற மருந்துகளுக் கெல்லாம் சிறந்ததான ஒரு விஞ்சை மூலம் சொல்லுகிறேன். அந்தப் பரிகாரத்தால், எல்லாங் கைகூடும். இந்தச் சூட்சத்தால் தேகம் பொன்னிறமாகும். இதை வாதத்திற்குக் காரணமாகச் சொல்லுவேன்.

## வாதத்திற்கு மருந்து

ஆதியாம் பூமி நாதம்
　　அதையைந்து சுத்தி செய்து
வேதியாம் பழத்தின் சாறும்
　　விட்டரைத் துலர்த்திக் கொண்டு
சாதியா மோட்டில் வைத்துத்
　　தணலிடு கோழியாக
வாதியாம் பெயரீர் கேளீர்
　　வடிந்திடு மெண்ணெய் தானே.

(கு - ரை) இவ்விருத்தம் இரசவாதஞ் செய்வதற்குக் குரு மருந்து செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) முதன்மையான பூமிநாதம் என்னும் பூ நீற்றை ஐந்துதரஞ் சுத்தி செய்து, வேதையாகக் கூடிய பழச்சாறென்று சொல்லப்படுகின்ற சுத்த ஜலத்தால் அரைத்துப் பில்லை தட்டி உலர்த்தி ஒரு ஓட்டிலிட்டு மூடிச் சீலை செய்துலர்த்திப் பத்தெருவிற் புடம் போட்டெடுத்தால் எண்ணெய் வடிந்திடும்.

## தொடர்ச்சி

தானென்ற பூமி நாதஞ்
　　சகலமுங் கட்டும் பாரு
வானென்ற விந்து வொன்று
　　வளர்வெடி யுப்பு நான்கு
ஊனென்ற சீனம் ரண்டும்
　　ஒன்றாகக் கூட்டிக் கல்வம்
கானென்ற சிமிட்டுப் பாலுங்
　　கருவுமே விட்டிட் டாட்டே

(க - ரை) இவ்விருத்தம் குரு மருந்து செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

(பொ - ரை) இந்தப்பூநீறானது எந்தச் சரக்கையும் கட்டும். இத்துடன் இரசம் ஒரு எடை, வெடியுப்பு நான்கெடை, படிகாரம் இரண்டெடை ஆகிய இவைகளை யெல்லாம் ஒன்றாகச் சேர்த்துக் கல்வத்திலிட்டுச் சிமிட்டுப் பாலாலும் கோழி முட்டை வெண்கருவாலும் நன்றாயரைப்பாய்.

சிமிட்டுப்பால் இரசவாதிகள்பால் கேட்டறிக.

## தொடர்ச்சி

ஆட்டியே வில்லை செய்தங்
　　ககலமா மோட்டில் வைத்துச்
சூட்டியே காயப்போடு
　　சுருக்கெனக் கணிலிட்டக்கால்
மாட்டியே குக்குடத்தில்
　　வலமுடனாற வாங்கிப்
பூட்டியே யெடுத்துப் பாரு
　　புகல்முப்புச் சுண்ணமாச்சே.

(க - ரை) இவ்விருத்தம் குரு மருந்து செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

(பொ - ரை) அரைத்துப் பில்லை செய்து ஒரு அகலமான ஓட்டில் வைத்துக் காயப்போட்டு, அந்தப் பில்லை கணீலென்று சத்தங் கேட்டால் மறு ஓடு மூடிச் சீலை செய்துலர்த்திப் பத்தெருவிற் புடம் போட்டு ஆறின பின் எடுத்துப் பார்த்தால் முப்புச் சுண்ணமாம்.

## பெருமை

ஆச்சப்பால் வீரம் பூரம்
　　அறைந்திடுஞ் சரக்கை யெல்லாம்
மூச்சப்பா லோடொட் டாமல்
　　முக்யமா யடக்குஞ் சொன்னேன்
போச்சப்பா சுண்ணஞ் செய்தீர்
　　வளமுள்ள செந்தூ ரங்கள்
காய்ச்சப்பா நீறு மூலி
　　கட்டுகட் கடிதான் காணே.

(க - ரை) இவ்விருத்தம் குரு மருந்தின் பெருமை கூறுகின்றது.

(பொ - ரை) அப்படி செய்து முடித்த பிறகு வீரம் பூரம் முதலாகச் சொல்லப்பட்ட சரக்குகளை யெல்லாம் இது ஓட வொட்டாமல் அடக்கும், இப்பொழுது சுண்ணஞ் செய்தீர், இது செந்தூரங்கள், நீறு, மூலிகைகளால் கட்டும் கட்டுகள் ஆகிய இவைகளுக்குக் காரணப் பொருளாகும்.

## நோய் நட்சத்திரத்தால் நோயாளி நன்மை தீமை யறிதல்.

*அடியொன்று தலை மூன்றதது வுஞ்சாவாம்*
*அடுத்தவரை யோர்நான்கிலதுவுஞ் சாவாம்*
*படிபுகழு முடலின்வரை யெட்டி னிற்கில்*
*பையவே நோய்தீரும் பயமோவில்லை*
*கடிக்கமலக் கைகாறன் வரையினிற்கில்*
*கனகம்போற் றேகமுமாங் கண்டு கொள்வாய்*
*அடிமுதலாயிரவி நின்ற நாளினைத் தொட்*
*டபிசித்தோடிரூபத் தெட்டாய்ந்து கொள்ளே.*

(கு - ரை) நோயாளி நோயில் படுக்குங் காலத்தில் சூரியன் நின்ற நட்சத்திரத்தை முதலாவதாகக் கொண்டு உத்தராடத்துக்கும் திருவோணத்துக்கும் இடையில் அபிசித்து என்கிற நட்சத்திரத்தைச் சேர்த்து இருபத் தெட்டாக வரிசைப் படுத்தினால் நோயாளி நோய் கொண்ட நாள் கடைசி ஒன்றானாலும் மேலிருக்கிற மூன்றில் எதுவாயிருந்தாலும் அடுத்த நான்கு நட்சத்திரங்களில் எதுவாக யிருந்தாலும் அந்நோயாளி இறந்து விடுவான். அதற்கடுத்த உடற் பங்காகிய எட்டு நட்சத்திரங்களில் எதுவாக விருந்தாலும் நோய் மெதுவாகத்தீரும். ஆனால் பயமில்லை. கைகால்களின் பங்காகிய மற்ற பன்னிரண்டு நட்சத்திரங்களில் எதுவாகவிருந்தாலும் உடல் பொன்மயமாம். மருத்துவனான நீ இதைக் கண்டு கொள்வாய்.

## தாளிசபத்திரிப் பொடி

*கொள்ளவே தாளிசங் கழஞ்ச தாறு*
*கூட்டுதிரி கடுகுகழஞ் சீரி ரண்டா*
*மள்ளவே யேலமில வங்கந் தானு*
*மாக்கவைகள் வகைவகைக்குக் கழஞ்சதைந்து*
*துள்ளவே யிடித்துவடி கொண்ட பின்பு*
*தூக்குகழஞ் சீராறு சீனி கூட்டி*
*உள்ளன்பாய்த் தின்றுவரில் வரட்சி பித்தம்*
*ஓடுசலக் கடுப்பிரத்த மேகம் போமே.*

(கு - ரை) இவ்விருத்தம் தாளிசபத்திரிப் பொடி செய்யும் வழியைக் கூறுகின்றது.

(பொ - ரை) தாளிச பத்திரி கழஞ்சு 6, தோல் சீவின சுக்கு கழஞ்சு 4, மிளகு கழஞ்சு 4, சிறுதிப்பிலி கழஞ்சு 4, ஏலம் கழஞ்சு 5, மொட்டெடுத்த இலவங்கம் கழஞ்சு 5, இவைகளை யெல்லாம் உலர்த்தி யிடித்து வடிகட்டிக் கொண்ட பிறகு வெள்ளைச் சர்க்கரை பன்னிரண்டு கழஞ்சு கூடச் சேர்த்து வைத்துக் கொண்டு காலை, மாலை, இரண்டு வேளையும் வெருகடியளவு சாப்பிட்டுக் கொண்டு வந்தால் சில நாள்களில் உடல் வரட்சி, பித்தம், நீர்க்கடுப்பு, இரத்தமேகம் ஆகிய இவைகள் தீரும்.

## தொடர்ச்சியும் ஜாதிலிங்கக் கட்டும்

மேகம்போஞ் சகலநோய் வாய்வுந் தீரும்
வேடிக்கைச் சிமிட்டுவித்தை வாதங்கேளு
பாகம்போ மெண்ணாதே கந்தி தாரம்
பகருமரப் பொடியோடு சிலையுங் கூட்டித்
.தாகம்போங் கருவிட் டரைத்து வாங்கிச்
சமனாக லிங்கத்திற் கவசங் கட்டி
ஆகம்போ மெண்ணாதே குக்கு டத்தில்
அப்பனே சாதிலிங்க மடைகட்டாமே.

(கு - ரை) இவ்விருத்தம் தாளிசபத்திரிப் பொடியால் தீரும் நோய்களின் தொடர்ச்சியும், சாதிலிங்கக் கட்டு செய்யும் வழியுங் கூறுகின்றது.

(பொ - ரை) இப்பொடியினால் மேகம், பல நோய்கள் வாயு முதலியவை தீரும். இனிச் சிமிட்டு வித்தை வாதத்தைக் கேட்பாயாக. அது தூய்மை செய்த நெல்லிக்காய்க் கந்தகம், தாளகம், இரும்பு, அரப்பொடி, மனோசிலை இந்நான்கையும் வகை ஒன்றுக்குக் கால் பலம் வீதம் எடுத்துக் கோழி முட்டையின் வெண் கருவால் அரைத்து ஒரு பலம் தூய்மை செய்த இலிங்கக் கட்டிக்குக் கவசங் கட்டி (பூசி) உலர்த்திச் சீலைமண் செய்து பத்தெரு முட்டையிற் புடம் போட்டு ஆறின பின்பு எடுத்துப் பார்த்தால் அவ்விலிங்கம் கண்ணடைந்து கெட்டிக் கட்டாகும்.

## கலிவிருத்தம்

கட்டான லிங்கங் காட்டுமுன் னோர்களை
மட்டான தனபதி வைத்திடும் வேதைகேள்
விட்டான சூடனும் வீரமுங் கூட்டிடு
தட்டான தில்லைத் தங்கம்போ லாடுமே.

(கு - ரை) இக்கலி விருத்தம் முன்லிங்கத்தைப் பின்னர் செய்யும் வழி கூறுகின்றது.

(பொ - ரை) முன்னர் கட்டான லிங்கமானது இது செய்வோனது பெற்றோர்களைக் குபேரன் உலகத்தில் வைக்கும் (எனவே செல்வமுடையவர்களாவார்கள்) என்றபடியாம். ஆகையால் அப்படிப்பட்ட இலிங்கத்தால் செய்யப்படும் வேதையைக்கேள். அந்த லிங்கத்தை உருக்கி அதில் கர்ப்பூரமும் வீரமும் வகைக்கு ஒரு கழஞ்சு சேர்க்க யாதொரு தடையுமில்லாமல் தங்கம்போல் உருகியாடும்.

ஆடவேகந்தி யதிலிஞ் சிச்சாறு
கூடவே விட்டக் குழைய வரைத்திடு
வாடவே சாமம் வளர்த்த வெயில்முகம்
நாடவே யிப்படி நாள்மூன்று பாருமே.

(சு - ரை) இக் கலிவிருத்தம் மேல் இலிங்கக் கட்டு வேதையின் தொடர்ச்சி கூறுகின்றது.

(பொ - ரை) அஃதிருக்கத் தூய்மையான கந்தகத்தில் இஞ்சிச் சாறு விட்டு நன்றாயரைத்துக் குழம்பாக்கி ஒரு சாமம் என்னும் மூன்று மணி நேரம் வெய்யிலில் வைக்க வேண்டும். இப்படியே மூன்று நாள் செய்ய வேண்டும்.

பாருநீ கந்தகம் பற்பம தாகச்
சேருநீ லிங்கமும் செயமான கந்தியும்
வாருநீ பீங்கானில் வளகும ரிச்சாறு
மேருநீ கோழி ரத்தமுங் கூட்டிடே

(சு - ரை) இக்கலி விருத்தம் மேற்படி இலிங்க வேதையின் தொடர்ச்சியாக கூறுகின்றது.

(பொ - ரை) இப்படி செய்தால் கந்தகம் பற்பமாகும். முன் செய்த லிங்கத்தையும் பின் செய்த ஜெய கந்தக பற்பத்தையும் ஒரு எடையாகப் பீங்கானிலிட்டு அதில் வளப்பமாயுள்ள கற்றாழை மட்டைச் சாறும் கோழி ரத்தமும் சேர்ப்பாய்.

கூட்டி யதனிற் குழப்பப் பிரகத்தைத்
தீட்டு ரவிமுகந் தினமூன் றுலர்ந்தபின்
நாட்டு வராக நல்ல புடத்திலே
வாட்டி யெடுக்க மாசற்ற பற்பமே.

(சு - ரை) இக்கலி விருத்தம் மேற்படி இலிங்கக்கட்டு வேதையின் தொடர்ச்சி கூறுகின்றது.

(பொ - ரை) மேற்படி இரண்டையுஞ் சேர்த்துக் குழைப்பி

அப்பிரகத்தின் மேல் பூசி அது மூன்று நாள் வெய்யிலில் நன்றாய் உலர்ந்தபின் வராக புடம்போட்டு ஆறின பின்பு எடுத்தால் தூய்மையான பற்பமாம்.

*பற்பமினிகேள் பறந்திடு நோயெலாம்*
*அற்ப மீதென் றசடரே யெண்ணாதீர்*
*கற்பமி தாகுங் கர்ம வினையறும்*
*நுட்பம தெல்லாம் நுவன்றனன் முற்றே.*

(க - ரை) இக்கலி விருத்தம் முன் முடிக்கப் பட்ட பற்பத்தினால் தீரும் நோய்களைக் கூறுகிறது.

(பொ - ரை) இனி அப்படி முடிக்கப்பட்டவற்றினால் எல்லா நோய்களும்போகும். பயனற்றவர்களே! இப்பற்பத்தை இலே சென்றெண்ணாதீர். இஃது ஒரு கற்பமாகும். கர்ம நோய்களெல்லாம் தீரும். நுட்பங்களெல்லாவற்றையும் சொல்லிவிட்டேன்.

அகத்தியர் குறுந்திரட்டு
முற்றுப் பெற்றது
⊠⊠⊠⊠⊠

அகஸ்தியர் அருளிய

## சண்டமாருதச் செந்தூரம்

நொண்டிச் சிந்து

பரிதிமதியுதித்த - திருப்
பாற்கடல் சூழுமிப்புவிதனிலே
பெருமைமிகப்பெருகும் - மானிடராம்
பேர்க்குவியா தியின் கக்குவிஷத்தை
அறிந்தேகுருமுனிவர் - மனது
அன்புடன் மானிடர்- தென்படவே
திருந்தியதோரவிழ்தம் - சண்ட
மாருதமென்றொரு செந்தூரம்
சொன்னார்வெகுசுருக்கு -பெருந்
தொல்லைகளாகிய அல்லலில்லை
முன்னால்மூலிகைச்சாறு - நல்ல
முத்திடும்பட்டை கியாழமது
தன்னாலரையாமல் - ரவியில்
தாக்கிடும்வெய்யலில்வையாமல்

தானானஒட்டிலிட்டு - மூடி
சந்துவாய்ச்சீலைகள் செய்யாமல்
புடம்போட்டுமாயாமல் - கள்ளன்
பொக்கிஷக்காலடி கண்டதுபோல்
திடம்பெற்றசெந்தூரம் - அதி
சீக்கிரம்செய்திடும்தொழில்முறைகேள்
பூரந்திசையெடையாம் - அதில்
பூட்டிடுலிங்கங்கந்திக்கெடையாம்
வீரம்வினையெடையாம் - இன்னம்
வேட்டியகெந்தியும் வீரனெடை
செந்தூரம்வீரனெடை - இதில்
சேர்ந்தசரக்கெல்லாம் சுத்தம்செய்து
சந்தோஷமாகவேதான் - அம்மி
தன்னிலிருஜாமம் தானரைத்தால்
வர்ணம்பவழநிறம் - அதில்
வந்திடுமுந்தன்மனங்குளிர
சொர்னமிதற்கீடோ - அதி
செக்கிதுசொக்கிது சொல்கிறேன் கேள்
திரமாகும்குப்பிதனில் - யாவும்
திரட்டியறுகோணந்தன்னில்வைத்து
ஏகத்தியானம்செய்து - புட்டிதனில்
யேற்றும்பணவெடை செந்தூரம்
நடுவினில்வைத்துருட்டி - நடு
நாவில்படாமல் முழுங்கிடவே
படுபாவிவியாதியெல்லாம் - நினைத்தால்
பறக்குமிதன் பேர்சொல்லிடவே
ஜன்னிபதிமூன்றும் - கர்மம்
தாக்கிடும்குஷ்டம்எட்டுவகைப்
பின்னேழுதோஷம்போம் - சொன்ன
பீலிகையெட்டுமகோதரம்போம்
வாதங்களொன்பதும் - கிட்டி
வந்திடும்பக்கம் தனுர்வாதம்
ஓதும்விரை வாதம் - வலியும்
உத்தமுடக்குநடுக்கலுடன்
அசதியும்கணுவாதம் - புண்ணு
அரணைகிரந்திசூலையுடன்
கண்டத்தின்மாலையுடன் - உள்ளங்
கைதனில்ஊரல்கருமேகம்

வண்டுகடிகளும்போம் - கொடிய
வல்லபல்விஷத்தொல்லையும்போம்
சயித்தியந்தானேழும் - கொடி
தாகியயோனிபுத்துவிடும்
வயித்தியஞ்செய்கிறவன் - வலு
வாகியவியா திக்கனுபானம்
தெரியாமல்செய்தாக்கால் - அவனைத்
தொடரும்வியாதி நானென்சொல்வேன்
குறையவனனுபானம் - திறமாய்க்
கூர்ந்திடில்சந்தோஷமாய்விடுமே. (தந்தினந்)

சண்ட மாருத செந்தூரம் செய்முறையில் பல முறைகள் உள்ளன. அனேகமாக பதினைந்து முறைகள் உள்ளன. ஒவ்வொரு முறையையும் அவரவர் உபயோகத்தில் சிறப்பாக உள்ளதாக கூறப்பட்டுள்ளது. இப்படி பதினைந்து முறைகள் ஏன் வந்தன என்று பல உரையாசிரியர்களால் கூறப்பட வில்லை.

பூரம் திசையெடையாகவும், லிங்கம் திக்கெடையாகவும் கூறப்பட்டுள்ளதால் திசையையும் திக்கையும், பல எண்ணிக்கையில் அவரவர் அனுமானத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இதுவே பலமுறைகள் ஏற்பட மூலகாரணம், இருப்பினும் கீழ்கண்ட எடைபிரகாரம் செய்யும் போது வாய்ப்பிடிப்பதில்லை எனப்பலவாறு கூறப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| பூரம் | வராகனெடை | 4 |
| லிங்கம் | ,, | 8 |
| வீரம் | ,, | 2 |
| நெல்லிக்காய்கெந்தி | ,, | 2 |
| ரசச்செந்தூரம் | ,, | 2 |

மேற்கண்ட முறையில் வாய்ப்பிடிக்க வில்லையெனப் பலராலும் கூறப்பட்டிருப்பினும், செய்த மருந்து நூலில் கண்டபடி நோய்களை கண்டிக்கிறதா என்பது தெரியவில்லை. சரக்குகளை சுத்திசெய்து சேர்க்கும்போது பவழநிறம் வரவேண்டும் எனத்தொடுகுறிப்போல் பாடலில் கூறப்பட்டுள்ளது சரியான எடையை கண்டறிய இதுவே சூட்சம். சித்த மருத்துவ ஆய்வாளர்கள் இதை கவனித்து மருந்து செய்வது உத்தமம். பச்சை வெட்டாக மருந்து செய்வோரும் உள்ளனர். இது அகத்தியரின் மூலப்பாடலுக்கு ஏற்புடையது அல்ல.



உ

கடவுள் துணை

.......,.........

பதினெண்சித்தர்களில்

மகாமகத்துவம்பொருந்திய

அகத்தியமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# ஜாலநிகண்டு – 200

## காப்பு

உன்னியபொதிகைவாழுங் குருமுனியருளையோதி
இன்னியநிகண்டுபாடி யிந்திரஜாலநூலைப்
பன்னியபாஷைதோன்றப் பண்டிதவேதநாவுக்
கன்னியுமுமையுமீசன் கந்தனுங்காப்புத்தானே. 1

தானெனும் வழலையாதி சற்குருவடிவுயீசன்
வானமும்புவியுமாதி மதிரவிவெளியில்நின்ற
ஞானமுமாகியம்மை நாதமும்விந்துமாகி
மோனமாய்நின்றபிண்ட முடிவுதன்காப்புத்தானே. 2

## நூல் - வேறு

காப்புக்குவிந்து விட்டக்கருவொளி
மூப்புவுக்குத்திவை முன்னைவரைந்திடு
கோப்புக்குவொண்ணலர் கூடவளிப்பது
ஆப்பதுபோய்விடி லாடாதுதேரே. 3

தேரனுமானால் சிகரத்தில்வாலையை
ஆரனுமானால் அப்புவைமேலிடு
மாரணமானால் (மசி) (நசி) யென்றிடு
போரினில்முன்னும் பின்னுமெழுதிடே. 4

## (பிடிகருத்தொழில் நெய்)

எழுதியபிண்ட மிறக்கியநெய்தனைப்
பழுதறயெந்தத் தொழிலுக்குஞ்செய்திடு
வழுவறவித்தை மாறாமலாடிடுந்
தொழுவறக்கல்லாத் துடியதுள்தாளே. 5

## சல்லியகரு-பிடிகருமாவுக்கொடிமூலம்

துடிபெருஞ்சல்லிய நூலுக்கொருதொழில்
அடியடிவாழை யம்மயன்படைப்பதால்
பிடிகருமாவைப் பிலக்கப்படித்திடு
வடிவுள்ளசக்கா தேவிவலுக்குமே. 6

வலுக்கிரமஞ்சட் கிழங்கினிற்பாவைக்
குலுக்குறச்செய்து கொடிமூலஞ்சுத்து
வலுக்குறையாமல் வலுவாயடக்கி
நிலப்பிலுக்குநிற மெடுத்துப்பிலுக்கிடே. 7

எடுத்திடச்சொன்ன எழுதியிருமலங்
கழுத்திடுசுத்தி கழுவுமுன்வாங்கி
அழுத்திடுபிண்டத்தை ஐங்காயஞ்சேர்த்துக்
கொழுத்திடுபாவைக்குக் குறைபரப்பூசையே. 8

## மயானபூசை

பூசைதணியிற் பூட்டுமயானத்தில்
ஆசைதீரவே ஆடுடன்கோழியும்
மூசையிலன்னியம் முட்டையுந்தாக்கிடப் 9
பேசையிலந்தப் பிணமும்வருமங்கே.

அங்கேயிராதே அப்புறம்போய்விடு
எங்கேயென்றாலும் பதிக்கில்லையென்பதாய்
துங்கோனவிலுஞ் சொல்லா ததூக்ஷமே 10
.பங்கேருகப்பெனப் படுக்கையைக்கேளே.

## மாதர்வசியம்

கேளேநினைத்த கிளிமொழிமாதர்கள்
தானேயிடாது தடித்தடிமண்ணையும்
தூளேவொருபிடி (தும் மெனவெடுத்திடு 11
நாளேதுவெள்ளி நடுமத்தியானமே.

## மந்திரம் - தூம - சுக்கிரவாசம்

தியானம்வசியென்று செப்பறு நூறு
மயானத்திற்கென்ன மஞ்சனின்பாவை
தியானத்தைக்கொண்டுபோயிநிசியிலே
மயானத்திற்பேயும் பெண்கொண்டுவருகுமே. 12

## மோகனம்

வருமேயுடன் கட்டைமானார்கருந்
தருமேசெயமோகனஞ் சவுந்தோத்திரம்
மருமேவுசக்கரம் மாதூடியிடு
குருமேவுவந்துமே கூறுவாள்பாரே. 13

பாரினில்வட்டம் பதிப்பாயெ ருமுறை
சீருறுமவ்வையுஞ் சேகரமாக்கிவை
பேருடபேரையும் பிறகேவரைந்துவை
ஊரைவிட்டோடி யுலாவுருநாளே. 14

வைப்பதுமஞ்சள் வருக்குஞ்சீலை பூவை
அப்பவல்லோதொழில் ஆடும்வழலையாம்
முப்பதுநாழிகை மூத்தவள்மந்திரம்
தப்பிவிடாதே சாரு (தூ) மென்றே. 15

## நயனங்கொடுக்க

தூமென்றஅக்ஷரஞ் சொல்லிமுகிழ்ந்தால்
நாமொன்றுசொல்வோம் நயனங்கொடுக்க
போமென்றுசத்துரு பொசிப்புப்பலவுடன்
மீமென்றமின்புழு மின்னியெடுத்திடே. 16

உன்னியமின்புழு வொக்கவரைத்ததில்
கன்னிவழலைக் கடுகளவேற்றியே
அன்னியரன்னம் பொசிப்புறவானால்
மின்னியநோக்க மொழிந்திடுந்தானே. 17

தானேவணங்கச் சத்துருவன்னை
நானேதோலெனவும் வந்துகண்ணில்
தேனேபுவியந் தேனிட்டுமிளகுடன்
மானேவிழியிருள் வாங்கும்வெளியே. 18

## வெளிக்கருத்தம்பலம்

வெளிக்கருத்தம்பலம் வேணதெடுத்து
பளிவல்லூறுநஞ்சு பாச்சியரைத்து
மெழுந்துவந்தனல் வேதிச்சுவொன்றாய்
தொழில்செய்துபாரு சொன்னவிதமாமே. 19

## பாவைவுரு - விரோதியைப்போற்செய்து முள்ளுகுத்துதல்

விதமென்னபாவை விரோதியுருப்போல்
சுகமுடன் செய்து தாளாமுச்சி
பதமுறுமுந்தி மார்பினில்முள்ளால்
குதவளைபிதுங்கக் குறிப்புடன்குத்தே. 20

## முள்ளுவிபரம் இலாடமிரும்பு கிராணத்தில்பண்ணின ஆணி

குத்தியநாரை குளியெட்டிநாலும்
முத்தியகெந்த முள்ளேயித்தாலே
வத்தியவட்டத்திருக் கைகளால்முள்ளல்
நத்தியநட்டுவக் காலிமுள்தேளே. 21

முள்ளென்பார்கள்ளி யெழுமுள்ளென்பார்சிலர்
விள்ளுரேனாணி லாடத்திரும்பை
வொள்ளியகிராணம் பிடிக்குமளவில்
வள்ளிசாயாணி பிடித்துவைமாட்டிடே. 22

## மாடனுக்குப் பெலிசாவல்

மாடனையேவு பிடிப்பான்மடங்கச்
சோடனையாக வுபசாரஞ்சொல்லி
சாடனமந்திரம் சாவல்பெலிவெள்ளை
வோடென்னவோட்டத்தி லுயிர்கொள்ளுவானே. 23

## பாவை-எரிப்பு-புகை

கொள்ளுஞ்சுடலையிற் குறிப்புள்ளபாவையை
கிள்ளிமணலிட்டுக் கிண்டதின்மீதில்
கள்ளிவிற்கிடகன லிடுவேப்பெண்ணெய்
யள்ளியமசிநசி யாயிரத்தெட்டே. 24

## ஸ்திரீகளுக்கு-யீடு

ஆயிரத்தெட்டுரு வாகுமுன்மூத்தவன்
வாயுரைச்சீலை வடிதூளிப்புகையை
நீயுறக்காட்டு நிலைகெடும்பேய்கள்
சீவுறமந்திரஞ் செப்பியதாமே. 25

செப்பியவிஞ்சை செகசாலமாடிடும்
ஒப்பியபிண்ட முரைக்கவொண்ணாதே
இப்புவிமீதி லீடொன்றுகேளு
அப்பிலேமுப்பை யாவத்தைப்பாரே. 26

## புருஷர்களுக்கு-யீடு-அப்பு-உப்பும்

பார்ப்பது கோசலம் பதக்குநீராகும்
வார்ப்பதுபாண்டம் வாய்மூடிசெய்து
ஏற்பதுசுள்ளிபோட் டெரியிட்டுக்கொண்டு
கார்ப்பதுருப்பைக் கருவிட்டுத்தாக்கே 27

தாக்கியபோது தையலரெல்லாம்
நோக்குவதுன்னை நொடிக்கருவாலே
ஆக்கியமன்ன ரன்புறக்கேளு
பாக்கிலேநாதம் பகர்ந்திடச்சொல்லே. 28

## தண்டு சுருங்க

சொல்லியதண்டு சுருங்கவகைகேளு
சொல்லியமாட்டுணி குடிக்கிறரத்தம்
சல்லியஅட்டை ரத்தமுஞ்சாரித்து
வொல்லியபேர்க்கு வுணர்வுடன் தாக்கே. 29

வுணர்வுடன்சென்றா லுதிரமுறாது
மணமுறப்போக போக்கியமாறுங்
கணவனைகைவிட்டு கடக்கநிற்பாளே
பிணமெனத்தண்டு பெருத்திடக்கேளே. 30

## தண்டு பெருக்க

பெருத்திடப்பாலும் பெரியமுருங்கை
பொருந்திடப்பூபை அவித்துப்பிழிந்து
குறித்திட்டுக்கொண்டா லெடுக்கும்பிலமே
கொருத்திட்டுநீதரக் குடித்திடுவீரே. 31

### பாவைக்குப்-பூசு-ஜங்காயம்பிணக்கொள்ளி ஆப்புகிடாவும்

வீரத்தைவாங்கி வெள்ளையுங்கூட்டிப்
பூரத்தைச்சேர்த்துப் புழுகுங்கலந்திடு
காரத்தைவைத்த கருவுக்கிதுசரி
சாரத்தையுண்ணுந் தனிப்பாவைபூசே. 32

பூசியமுசிக்கிது பூச்சமே ஆடிடும்
பேசியபேச்சுக் கெதிராளிபேரை
ஆசுவாய்க்கீறி யடக்கிவைகம்மாய்
தாசுவன்கொள்ளு பிணஞ்சுடுகோலே. 33

### மலத்தல்

கோலதுகிட்டில் முனைபோல்செறுக்கி
மேலுறஆப்புக் கிட்டிஅம்பலத்தில்
மூலமடைக்கு முன்னொடுபின்னுங்
காலனும்வந்து கைபிடிப்பானே. 34

### சாதம் வேகாதிருக்க நத்தைசூரிவேர்

பானையில்சேர்த்து பருக்கைவேகாமல்
சூரியநத்தை சூரியன்வேரை
மீனத்தில்காப்பு விரும்பியிசைத்திடு
கூனையிலெதுவுங் கொதியாதுபாரே 35

### எட்டிமுளை-வலைகூட்டி-நத்தைச்சூரி வசம்புகூட்டி-மரணத்துக்கு

கொதியாதுமாதர் கும்பியில்மூலஞ்
சதியாதுமுந்தி வழலையைத்தாக்க
விதிமுகியமன்னாள் விளம்பினோமெட்டி
விதியாளியானால் மேவுவான்பாரே. 36

வானவருங்காயம் வளருள்ளிவெந்தய
முனம்பெருவோம முள்ளகடுகுவை
மேன்பாடதாக விரும்பியே ஆக்கை
கான்படவந்து கருதித் துடருமே. 37

துடருமேஆக்கை துடக்கையருக்க
கடருமேயிப்பால் கைகண்டவித்தை
படருமேயிப்பால் வத்திப்பிடித்து
யிடருமேதூழ நவிலவசம்பே 38

வசம்பையுங்கூட்டி மரணமுரைக்கும்
நிசம்பெரப்பாடத்தின் வட்டமுந்தள்ளி
கசங்கெடக்கின்ற கடாரமின்தப்பாது
துசங்கண்டவித்தை சொந்தமிதாமே. 39

## வெட்டுபட்டவன் சிரசொடுசுணங்கு ஐயங்காயம் வேப்பெண்ணெய் முள்ளுஎழுத யிடுகாட்டில்-கரவிக்கவும்

ஆமேயிதுகருப்புண் டென்பதில்லை
நாமேயறிந்து நாட்டுவோங்கேளாய்
தாமேதுணிந்துயிர் தாக்கியவெண்டலை
யாமேசுணங்கு தொடாமலேயாடிடே. 40

ஆடியவெண்டலை யோட்டியுமங்காயம்
தூடியபோது துணிந்தமைவேப்பெண்ணெய்
கூடியமுள்ளாற் குதித்தவன்பேரை
பாடியபேரைப் படித்தெழுதீரே. 41

எழுதிமுடிந்தா லினிகருவென்ன
புழுதியைத்தெள்ளி போட்டிடுவாயில்
எழுதியவொட்டிடை யிடுகாட்டில்தூவி
முழுகிடுமுன்னே மூர்த்தியைமுட்டே. 42

முட்டிய ஆணி யெழுத்தின்மேற்குத்தி
வாட்டியெடுத்திடு மரணமடைவான்
மீட்டிடஅந்த யெழுத்தையளித்துக்
காட்டியநீரிற் கழுகவிடுமே. 43

## கத்திரிக்காய்-மலசலங்கம்-ஐங்காயம் குற்றிபிளவை

விடுமேகத்திரிக் காயின்மேல்மூலம்
படுமேல்சலமும் பாடிஐங்காயம்
தொடுமேகருவந் துவட்டித்தடவ
விடுமேகுற்றி விடுபில்லியாகுமே. 44

## சல்லியதேவி திருப்பவும்-மத்தங்காய் பயித்தியங்காண

பில்லியாச்சென்று பிளவைமுதுகில்
சல்லியதேவி தாக்கிப்பிடிப்பள்
சொல்லிமுடியுமோ துளாயிரம்பொந்தாம்
துல்லியகாயின் சூக்ஷந்துடையே. 45

துடைத்துநீர்விட்டால் துளைபோந்தடைபடும்
படைத்தவிதிவந்து பாரிற்பிழைப்பான்
அடைத்தவனாட்டை திறந்ததுபோலே
கடைத்தலையீசன் றான்படைப்பானே. 46

படைப்பான்பிரமன் பரமசிவனும்
துடைப்பான்சுருக்கில் சூக்ஷத்தில்ரட்சிப்பான்
அடைப்பான்றிறப்பா னவ்வித்தைக்கெல்லாம்
விடைப்பானிவனென்று விளம்புவார்பாரே. 47

பாரேயிதுசாலம் பகருமிருநூறு
தேரானவட்சரந் தோன்றுங்கருக்களும்
நேரானமந்திரம் நெருங்குமுருக்களும்
கூரானசக்கரங் குறிக்கும்வேதமிதே. 48

## பேதனபோதல்

வேதமாமட்சரம் விரும்பும்பரிச்செம்பு
போதமாம்சிகாரம் போற்று நசி மசி
நாதமாமுப்பூவும் நவின்றிருமைங்கோலம்
தீதமாம்பெலியுடன் தெளிவுறவோதிடே. 49

ஓதியபோது வூரைவிட்டோடி
பதையும்வீடும் பதியுமிழந்து
காதலிபெண்ணைக் காசினிதோர்த்து
வீதியில்தந்து வெறிமீறுவானே. 50

மீறியகொட்டி விடவேவிடமானால்
சீறியகாரைச் சீக்கிரம்பெற்று
கோறியேயதனைக் குணமெனக்குறித்து
நீரிலேபோட்டு நிமிஸீம்விடுமே. 51

## மை-காரெள்ளுதயிலம்-தூக்கணாங்குருவிமுட்டை கழுதைதண்டு-வெட்டுண்ட-மண்டைவோடு முட்டை-அஞ்சித்தயிலம்

விடுமேமையொன்று விளம்பிடக்கேளு
சுடுமேகாரெள்ளி னருவளிதயிலத்தில்
படுமோ தூக்கணாங் குருவிபார்முட்டை
எடுமேகருக்கி யினவகைதானே. 52

தானேகருத்த கழுதையின்ரண்டு
மானேவெட்டுண்ட மண்டையினோடு
தானேசெருப்படிச் சாறுடன்மேனிச்சார்
ஆனைக்கண்சட்டி யடுப்பேற்றிவைத்திடே. 53

வைப்பதுவெவ்வேறு வகைப்படிவாங்கி
கைப்பிடிமுட்டை கருக்கியநீரும்
இப்படிவைக்க யிதையெல்லாமொக்க
அப்பனே சொன்னே னளிஞ்சிவித்தையே. 54

விரையத்தயிலத்தை வேதித்துச்சேர்த்து
அரையத்துமைகூட்டி அடித்துகைகொண்டு
நரைத்தவன்கைதப்பி நாம்கடியாதவன்
துரைக்கருகூட்டிநீ சோதித்துப்பார்த்திடே. 55

## அஞ்சனாதேவி மந்திரம்ஓத

சோதிப்பதஞ்சனா தேவியைத்தோத்திரம்
மீதிக்குள்பாதாள கண்டியைவேண்டிடு
ஆதிப்பொருளா மடிக்கியதெட்டெல்லாம்
பூதிருங்கைவிட்டு பூமியுங்கீருமே. 56

## பாதாள அஞ்சனம்-அகத்தியர்-அஞ்சனம்

பூமியின்பின்பு புதைத்தபுதையலும்
நேமிதமான நிதிபொருளானதும்
தாமிதமன்றியே தந்திடுமையிது
நாமிதுகண்டு நடத்துந்துரையிதே. 57

துரைப்படிவாடை சொல்லியபூமியி
லுரைக்கிறேன் கேளு முருவமிலாமல்
நிரைக்கிறபிண்ட மதைநீகொண்டுமே
கரைக்கழுவானேன் கருதுருநூறே. 58

## உரமிட்டு-கள்ளு-62-வஸ்து-32

நாறுரு-ம-ந-ய-வ-சி-யென்றுநோக்கிக்
கூறியபாண்டங் குறித்துள்ளேவைத்து
பூரமுஞ்சற்குற பொடித்துடன்போட்டு
ஆறியகள்ளு அறுநாழிவஸ்தே. 59

### தேன்-நாவிறி-பசளையமுறி-3 2-கொச்சிமஞ்சள்

வஸ்துமுன்னாழி மலாத்தேனுநாவறி
பத்தரைமுன்னாழி பச்சிலையமுரியாம்
சத்துறவண்டு துகிலாடைமீதினில்
எத்தியகொச்சி மஞ்சளிடித்திடே. 60

### நாட்டுமஞ்சள்-குளவிந்தமஞ்சள்-பலம்-6

இடிக்கிறமஞ்ச ளிவட்டித்துமஞ்சளும்
படிக்கிறகுளவிந்த மஞ்சளும்பாச்சிலை
யடிக்கடிவீணே யலட்டாதேகேளுமே
துடிக்கிறஆறு பலமென்றுசொல்லிடே. 61

சொல்லியிடித்துத் தூளிதமஞ்சள்
வல்லியவண்டின் மேல்வாரிச்சொறிந்திடு
மெல்லியவட்டுபோல் வெந்துமேமண்ணையில்
கல்லியப்பிள்ளையின் தாளிகிண்டிறக்கே. 62

### ஈருள்ளி-வசம்பு-அறுகம்புல்

இறக்கையில்ஈருள்ளி யிதமாகக்கிள்ளிவை
யுறக்கம்வராம லறுகம்புல்வசம்பிடு
பிறக்கையில்பித்தம் பிறலாமலேயிரு
குறக்கொள்ளிமூத்தவள் கூடவும்நிற்பாளே. 63

### தாணிக்காய்-வெந்நீர்-7-நாள்குளிக்கவும்

பாழானதேவி பக்கத்திற்போக
யேழடாநாள்தா னிக்காயையிடித்திடு
கோளானவென்னீர் கொதிக்கக்குளித்திடு
மூளாதமோடி முகப்பிரிவாளே. 64

### கருவூரான்-சுந்தரன்-இவர்கள் வாடைபார்த்துச்சேரு

பிரியாதவாடை பேசியதெல்லாம்
அறிவாகச்சொன்னே னகஸ்தியர்வாடை
கருவூரான்வாடை கருவானசுந்திரன்
தருவானதெல்லாந் தானிதிற்சேரே. 65

சேர்த்தெடுத்தொன்றாய்ச் செப்பிலேயாக்கி
பார்த்தெடுத்தந்தப் படிபசியேயிருந்
தோத்திரிப்பார்கள் சுருக்காகவந்துமே
ஏத்தியேதொழுவா ரிதுபோலுங்காணோமே. 66

காணாதநேரங் கரைவாருனைக்காண
பூணாரந்தோர்ப்பார் புலம்புவார்பெண்கள்
வீணாயிராதே விரும்புவார்மாண்பர்
ஆணாகவுன்னை யனைவார்கனவிலே. 67

## ஸ்ரீகள்-கனவிலும்பிரியார்கள்-திலர்தப்பொட்டிடு

கனவிலுமுன்னைக் காண்பார்கள்மங்கையர்
நினவிலுமுன்னை நேசமேவைப்பார்
மனதிலுமுன்னை மறந்திடமாட்டார்
தனதமாய்த் தேடித்தவிப்பாரே. 68

## குன்றி-பேய்ப்புடல்-நாய்ப்பாகல்-விரை
## சாதிக்காய்-கோறோசனை-காந்தம்

பாரோர்க்குச்சொன்னேன் பாஷைதுலங்க
ஊரோர்க்கும்பொட்டேன் வுரைக்கிறேன்கேளு
நேரானகுன்றி மணிபருப்பொன்று
பேரான பேய்ப்புடல் விரைபருப்பொன்றே. 69

ஒன்றானநாய்ப்பாகல் வித்துமேபவ்விதம்
குன்றானசாதிக்காய் கோறோசனையுடன்
மன்றானவூசுக் காந்தமுமுவந்திடை
பொன்றாமலாறும் புகட்டுங்களஞ்சியே. 70

## பொன்னாவாரைத்தயிலம்

களஞ்சியாய்கூட்டிக் கல்வத்திலாட்டி
வளஞ்செய்தபொன்னா வரையின்சமூலம்
உளஞ்செய்தயில முதகமாய்வாங்கி
நளஞ்செய்தபாகம் நாடிவிட்டாட்டே. 71

## வெள்ளைக்கருஞ்சாவல்ரத்தம்-மந்திரம்-வசி

ஆட்டியவெள்ளை கருஞ்சாவல்ரெத்தமு
மூட்டிவிட்டாட்டி முகத்தினிற்போட்டிடு
தீட்டியபோது வசியென்றுசெப்பிடு
போட்டிமைமாண்பர் புகலுவார்சரணமே. 72

## சபாபதிபீஜம்-2 3-அரைச்சக்கரம்-வ-சிய-ய-ம-ந

சரணமேசக்கரஞ் சபாபதிபீசம்
திரணமாயண்ட பிண்டமுஞ்செய்யும்
கரணமேபோடுங் கைகண்டவித்தை
மரணமுந் தோற்றமும் வருவிக்குமூலமே. 73

மூலமேசக்கர முறைப்படிகீறியே
சாலவேயிருபத் தஞ்சரைக்குள்ளே
கோலமே–வ–சி–ய–ம–ந–வென்றுவசீகரம்
பாலமேபோடு பார்நடுமாறே. 74

## நடுமாறு-மோகனம்-ம-ந-ய-வ-சி-இரண்டெழுத்து

மாறியமோகனம்–ம–ந–ய– வசி யென்று
கூறியரெண்டா மெழுத்தைக்கொண்டோது
வீரியம்பேசும் விசாமமாங்கிரியே
லேரியசித்தர்க ளெனக்குரைத்தாரே. 75

## தம்பனம்-நு-ம-எழுத்து

உரைத்ததுதம்பனம் ஓதும்–ந–ம–சி–வ–ய
விரைத்ததுலோக மேவுமிதுதான்
பரைக்குரையாணி பகராரிதனை
திரைக்கடல்மூன்றா மெழுத்தெடுத்தோதே. 76

## வித்துவசெனத்துக்கும்-எழுத்து-ய-வ-சி-ம-ந

## உச்சாடனம்-சி-வ-ய-ந-ம

எடுத்தோதுவித்துவ செனங்களேகேளீர்
படுத்தோது–ய வ–சி–ம–ந வென்றுமாரிடில்
அடுத்தோடுநாலா மெழுத்தையும்முள்ளி
தொடுத்தோதுசூட்சஞ் சொல்லார்கள்பாரே. 77

பாருச்சாடனம் பகருவேன்கேளு
சீருறு சி–வ–ய–ந–ம வென்றுசேரு
ஓரொருகால்தலை யாகவேவோது
கூருருவாப்போற் குலாவும்படிக்கே. 78

## மாரண சிவயந கடசியெழுத்து

படிமீதில்மாரணம் பாரடாஞானி
மடிவானெனன் சொன்னேன் ம சி வ ய நத்தில்
துடியாமலோட தூறையிடாமல்
கடியானபாதக் கடசெழுத்தோதே. 79

## பேதனம் நசிவயம

தேவையென்றபேதனஞ் செப்புவேன்கேளு
வாயென்னவே நசிவயம வென்றோது
சீயெனப்பேதிக்குஞ் சிரநடுமாறு
மாயென்னயின்னம் வகையறியாரே. 80

## ஆகிருஷ்ணம் ய ந ம வ சி இரண்டாமெழுத்து

அறியார்கள்கேளும் அகிருஷ்ணவித்தை
விரிவாகச்சொன்னார் விசனப்படாதே
நெறியாக ய ந ம வ சி யென்றே
குறியாகவிரண்டா மெழுத்தையுங்கூறே. 81

## அஷ்டசக்கரம் மாறுதல்

குறிப்படிச்சக்கரம் அன்பத்தொன்றிட்டு
நெறிப்படிபீஜம் நிறுத்தும்பலருக்குள்
வெறிப்பேடிவீணே விதியழியாதே
கருக்குருவாக கண்டிடுவித்தையே. 82

## இந்திர அக்ஷரம் நசிமசி தஅ

வித்தையிலிந்த அக்ஷரமிட்டு
சத்தியாய்நாலு சந்திபகல் ஹி யென்று
மத்திசநாமல ரைந்துமுக்கோணமிட்டு
முத்தியாயிரத்தெட்டு மசி நசி. 83

## 40 நாள்ஓத

நசி மசி யென்று நாற்பதுநாளும்
நிசியிலக்கானி நீமனைமேவிடு
குசரு துன்பங் கொள்கியப்பாலும்
வசையுறமாளுவான் மண்டலந்தானே. 84

## பன்னிரண்டுநாள்

தானேமுக்கோணந் தன்னிலவ்வாறிட்டு
மானேபரிகலர் வழங்கியநாமந்
தானேயெழுதி சாடென்றுமாறு
யேனொழுவானீ யீராறுநாடே. 85

## பத்துநாள்

நாளினில்வட்டம் நடுப்பகல்சாமம்
தூளமுக்கோணஞ் சொல்லியெழுதிடு
கோளுறவேசிவக் கூறு மயநவசி
பாளுவநோய்கொள்ளும் பத்துநாட்குள்ளே. 86

## நோய் வழலைக்கூட்டி நீர் ஓதிதூவ

உள்ளநிருந்தால் உண்டிலாவாதம்
உள்ளநூரென்றால் ஓகோவழலைகுரு
உள்ளதுகாணே னோதியநீரில்
உள்ளனைக்கூட்டி யோதிநீதூவிடே. 87

## நிசியில் தூங்காதிருக்க

தூவிடநேரஞ் சொன்னேனிசியில்
ஏவிவிடாதே யாருக்குந்தோன்றிட
தேவிதன்பூசை செய்யமறந்து
வோவியம்போலே யுறங்காதுபாரே. 88

## கூரம்பாகும்

பாரென்றுசொன்ன பகையையறுத்திடு
பாரம்பிரக்கப் பரையாதேயார்க்குங்
கூரம்பிதாகுங் குவலயத்தோர்க்கே. 89

## கருதும்பைமூலம்-கன்னிநூல்-செப்புக்குளிசம்

தோர்க்கிறவித்தை யெதிரிக்குத் தோன்ற
மூர்க்கமாய்கவதும்பை மூலத்தைவாங்கி
காக்கணுமென்று கன்னிநூற்சுத்தி
ஏர்க்கனப்பூசை யேத்திப்பிடுங்கே. 90

## தஅ-உரு-செபிக்க

பிடுங்கியமூலத்தைப் பேசாமற்செம்பில்
ஓடுங்கியபூசையில் சுத்திக்குளிசமாய்
துடங்கிய ஆயிரத் தெட்டுருநேர்ந்தபின்
துடங்கியசொன்ன துயில்பிசைத்தூக்கே 91

## சரஸ்ஜோதிவசியம்-வாக்குப்பாடை

தூக்கியபோது துவண்டான்பகையன்
வாக்கினிப்பாட வரிசையைக்கேளு
சாக்கரம்யாளுஞ் சரசோதிநிற்பாள்
மூற்கமாமேவ முறையருள்வானே 92

## வெண்தாமரை-தேனில்-வாலையோத-ஒருமண்டலம்

முறையென்னவேண்டா மரைநூலைவாங்கு
குறுகநறுக்கிக் குளிரவுலர்த்தி
தறுகபிடித்துத் தான்வடிகொண்டு
மருவியதேனில் மண்டலங்கொண்டே. 93

கொண்டிடுவிஞ்சை குறித்தசங்கென்று
யிண்டிடு-ஐயுங்கிலியுஞ்-சவ்வென்று-நூறு
மண்டலமோத வாக்கினின் செல்வி
அண்டையில்நின்றே யருள்புரிவாளே. 94

புரிவாள்வராகி புகட்டியகந்தரி
விரிவானபாடல் விடாதேபுறைபுறை
அரிதானமோசம் வசியங்கைகூடும்
பரிமேவுகீதம் பகருமும்மாதே. 95

இம்மாநிலத்தி லிருக்குமிம்மூலந்
தம்மோடேதொக்கைச் சார்ந்துசெங்கொட்டை
அம்மாகௌரி அறவெள்ளைநஞ்ச
சும்மாகொடுக்கச் சுண்ணாம்புசேரே. 96

### ஈடு-அடக்கமாய்செய்யவும்-10 நாளில் ஈரல்வற்றும்-இறப்பான்

சோரமாய்ச்செய்துவா றுடராமல்முன்வினை
வாராமலீரல் வளரும்நாள்பத்தில்
ஈரமோயில்லை யிழப்பான்சாப்பாட்டை
வீரம்விடாமல் விழுவானிறந்தே. 97

இறப்பான் தூரியம் யாவருங்கடி
முறைப்பாடுசெய்வார் முட்டுநோயென்று
கற்பானையுப்புக் கடும்பில்லியென்று
அறக்கேடுவந்து அழியும்புவியே. 98

புவிக்குளேவர்க்கும் புகலாதேயிக்கரு
தளிசமூச்சலடிப் பார்மிகவுண்டு
குவிக்குங்கரங்கள் கும்பிடுமுன்னே
செவிக்குச் செவிதா னறியாமற்செய்யே. 99

### ஸ்திரீகளுக்கு யீடு-களிப்பாக்கு-கள்ளிப்பால்பாடுகாணும்

செய்யவேயின்னஞ் ஜெகஜாலங்கேளு
மைவிழிமா தர்க்கு வருகவேசெய்திட
கைவசமாகக் களிப்பாக்கைக்கொண்டு
பொய்யல்லகள்ளியைப் பூரித்துணித்திடே. 100

துணித்திட்டபாக்கைத் திரும்பயெடுத்து
பணித்திட்டபாக்கொடு பகுந்துகொடுத்திடு
அணித்திட்டகெர்ப்ப மானாலுமங்கே
துணித்திட்டசோரை வடியுந்துடுக்க. 101

## கர்ப்பமானால்-சோரைவடியும்-மாத்துபாலில் சீரகமிட்டுக்குடிக்கவும்-15-நாள்-வெந்நீர்குளிக்க

துடுக்கானசோரையை துலைக்கவகைகேளு
முடுக்கானபாலில் சீரகஞ்சேர்த்திட்டு
இடுக்கானநாத மிறங்காதுவென்னீர்
முடுக்கானகொத்தான் முகத்தில்முழுகியே 102

முழுகுவதெப்படி மூவைந்துநாளும்
புளகிதமான புளியுப்புதள்ளிவிடு
மளவில்ரத்தம் மடைபடுமிப்பால்
அழகியமேனி யவளுக்குண்டாமே. 103

## சூதகரு-விபரமறிய-சல்லியமுனிசொன்னது மஞ்சள்-சீலைமாரசம்

உண்டானசூத முருக்குத்தச்சொன்னார்
சண்டாளசல்லிய மாமுனிதானும்
வண்டாடுமாடுதாழில் சீலைமார்க்கத்தை
கொண்டாடுமாதொழில் கூறுலகத்தே. 104

## விந்துநாதப்பிண்டம் மாக்கரு

உலகத்திற்சூதமுறை விந்துநாதம்
புலையர்க்குத்தோணுமாம் பொன்னாம்வழலை
தலைவைத்தற்பாவை சத்தியாய்நின்றிடும்
நிலையற்றமான நில்லுதுபாரே. 105

பாரினிற்பிண்டம் பகரார்பெரியோர்
ஊரினிற்கிட்டாது வுலவானமாக்கரு
வேரினிற்றண்ணீர் விட்டேநிலைக்குமே
நீரினிற்றாமரை நிற்பதுபாரே. 106

## சரக்குகள்போடவும்

நிர்ப்பதுசர்ப்பம் நினைவாய்ப்பிடித்து
சற்பத்தின்வாயில் தாளகம்வெள்ளை
கற்பூரம்நாபி கழஞ்சிதான்றூக்கி
வுற்பத்தியாக வுள்ளுக்குத்தாக்கே. 107

## தூரம்புரச்சீலையில்-வேப்பெண்ணெய்

தாக்கியவாயைத் தைத்துதலைகீழாய்
தூக்கிமுகட்டில் தும்பிரச்சீலையில்
காக்கலஞ்சீந்திற் கடுதலைதாங்கியே
மூத்தனார்வேரு முடிந்திட்டுச்சட்டியில். 108

## முக்கோணவட்டமிட்டு-அரவுநெய்-வடிக்கவும்

சட்டியில்வேப்பெண்ணெய் தயிலம்விட்டேத்திடு
மூட்டியடுப்பில் முனுமேற்கட்டி
கிட்டியடுக்கிக் கீறிடுமுக்கோணம்
வட்டமுள்ளிட்டு வடிநெய்யரவுநெய். 109

## கெந்திகூட்டி-யீடுகொடுக்க

அரவுநெய்கந்தக மிதுவழியாக
வரவுமேகண்டு மயங்காதேய்ப்போ
திரவுகோலான சேங்கொட்டைநஞ்சு
முரமுமேபனிநீரு முடன்கலந்தாட்டே. 110

ஆட்டுங்குழம்பி லணுவளவீய்ந்தால்
முட்டுந் தலைமண்டை மூளைவரைக்கும்
வாட்டியெடுக்கும் வருவான்மறலி
கூட்டுங்கருவுங் கலந்ததிற்கூட்டே. 111

## கன்னி-குமரகண்டர்க்கு-எந்தகுழம்புக்கும்
## இதுகூட்ட குபீலென்றுசாடும்

கூட்டுவாயீடு கொடுக்கும்வகைகேள்
கூட்டுவாய்சன்னி குமரகண்டகர்க்குங்
கூட்டுவாயெந்தக் குழம்பிற்குஞ்சேர்த்துக்
கூட்டுவாய்சாடுங் குபீலென்றுதானே. 112

## அனுபானம்-மத்தஞ்சாரில்-பிரம்மை
## மின்பூட்டில் கண்தெரியாது

தானேமத்தஞ் சார்தன்னிற் கொடுத்திடில்
மானேபிரமை பிடித்துமயங்குவான்
கானமின்பூடு கலந்துகொடுக்க
யேனோதெரியா திருகண்ணுந்தானே. 113

## கன்னிச்சாறு - பிளவைகாணும் - எண்ணெயில் - பகைபோம்

கன்னியின்சாறு கலந்துகொடுத்தால்
புண்ணியதாய்மேனிப் பிளவையுந்தாக்கி
எண்ணெயிற்றாக்கி முழுகினாற்றானே
பண்ணியபகையும் பதமும்வராதே. 114

## எதிரிபடை பொருத - தயிலம்வடிக்கிறமந்திரம்

வராதபசாசு மயங்கும்வெண்ணீற்றில்
பொராதேயெதிரி படையுமிப்பொட்டிடில்
இராதேக்ஷணத்தி லிடுபொட்டினீத்திடு
தராதேபுண்ணாய்விடுந் தண்ணீர்விட்டோதிடே. 115

ஓதியசுர்ப்பத் தியிற்றுரிமையின்
சேதியையார்க்குந் திறந்துவிள்ளாதே
சோதியேஹறிஹறி யெனச்சொல்லுமந்திரம்
போதிலாயிரம் பூட்டிவடித்திடே. 116

## வடிப்புக்கெல்லாம் - மந்திரம் - ஓத

வடித்திடசொன்னதற் கெல்லாமிம்மந்திரம்
படித்திடஆயிரம் பாடினாற்சித்தியாம்
முடிந்திடாதி வழலைக்கருமுறை
பிடித்திடத்தானல்லோ பேரும்பெற்றார்களே. 117

பெற்றவர்மந்திரம் பேர்பெரியோர்கள்தான்
எத்தனைகோடிபேர் லெக்கில்லையாவரும்
பத்தினாரல்லது பாவந்துதிப்பார்
இத்தனைபாடியு மின்னமொன்றுண்டுகேள். 118

## அண்டம்புகைக்க

உண்டுகேள்முட்டையின் உள்ளெதிராளியின்
பண்டுள்ளநிர்மலம் பாச்சியுருத்துடன்
மீண்டுசெய்காயமும் விடத்தின்றயிலமும்
அண்டவழலையும்மு ண்டத்திற்சேர்த்திடே. 119

## எதிரிபலந் - தயிலம் - அண்டக்கருவழலை
## கொடிசுற்றவும் - எதிரிபேரெழுதவும்

இட்டுவாய்மூடி யிளங்கொடிசுத்தியே
வட்டமாய்த்தோண்டி மயானத்தில்ஸ்தாபிக்க
பட்டவன்பேரும் பார்த்தேயெழுதியே
சட்டமாய்ப்போவான் சரக்குமுடிக்குமே. 120

## ரோகம்வரும்

முடிக்குமுன்றோக முடிப்பதைவாங்கி
நொடிக்கின்றமுட்டையை நூல்சுத்தவிழ்த்து
முடிக்கின்றவுள்க்கரு மூட்டைவிட்டப்பால்
குடிக்கின்றநீரிலே கொட்டிவிட்டாருமே. 121

## ஆள்சக்கரங் கீரவும்

ஆருமேவிடு ஆள்சக்கரத்தையுங்
கீறுமேகால்கை கீறிமுடிந்தபின்
மாறுமேஅஞ்சு வகைவகையாகவே
சீறுமேமூல பிரணவஞ்சேரே. 122

## சாடனம்-மாரணம்

சேருநாற்கோவாஞ் கிகாரவகாசம்
பேருவகார நகாரமகார
மூருமேசாடனம் பொன்பொலிதாடும்
பாருமேமகாரம் பதித்தால்மரணமே. 123

## தம்பனம்-மோகனம்

மரணமேமண்ணில் (ம—ந—ய—வசி) யூறிஏ
இரணமேமோசனஞ் செப்பவொண்ணாது
கரணமேமண்முதல் கண்டால்நகாரம்
பிரணவங்கூடிப் போதம்பனமாகுமே. 124

தம்பனமானதுஞ் சாற்றுரேந்துவேஷணம்
பண்பழியாதே பகர்வாய் (ய—வ—சி—ம—ந)
வென்பதுசிகாரம் வேண்டும்வசியென
உன்பதுருபேதனம் ஓங்காரந்தள்ளிடே. 125

## அஷ்டாங்கம்-அ-க்கும்-தகடுவிபரம்
## வெள்ளி-வேசனம்-தாம்பரம்-தம்பனம்

தள்ளிடு (ந—ய—வ—சி—ம) வென்றுசாதியே
உள்ளிடுமந்திரம் (ஓங்காரங்) கூறுவாய்
வெள்ளிச்சக்கரம் வேஷணமாடுமே
தள்ளிடுதாம்பிரந் தம்பனஞ்செய்வதே. 126

### தங்கம்-வசீகரம்-பொன்-மோகனம்-லோகம் உச்சாடனம்-காரியம்-சங்காரம்

செய்வதுதங்கம் வசீகரந்தீர்க்கமாம்
செய்வறுபொன்னில் சேருமோமோகனம்
செய்வதுலோகத்தில் தீருமுச்சாடனம்
செய்வதுகாரியஞ் சிவனேசங்காரமாம். 127

### நல்லெண்ணெய்மோகனம்-ஏரண்டம்-ஆகிருஷ்ணம்

காரமாம்வெள்ளியம் கருசனிமேவிடு
பேறுருபித்தளை பேதனஞ்செய்திடும்
வாருமேநல்லெண்ணெய் வாய்ப்படமோகனஞ்
சேருமேயேரண செய்யாக்கிருஷ்ணம். 128

### ஆவின்செய்வசீகரம்-வேப்பெண்ணெய்மாரணம்-புங்கெண்ணெய் உச்சாடனம்-புன்னையெண்ணெய்பேதனம்

கருகனை ஆவிநெய்காரணம்வசீகரம்
துருசெனும்வேப்பெண்ணெய்சொல்லியமாரணம்
புருஷனை யோட்டியபுங்கெண்ணைச்சாடனம்
பருகனைபேதம்பகர்புன்னைக்காயெண்ணெய் 129

### ஆதளையெண்ணெய்-தம்பனம்-மேதிஆடுபண்ணி-வேசனம் கழுதை-சுபத்துக்கு-அரிசிமாவு-வன்னி

எண்ணெயிலாளை யெண்ணெய்யேதம்பனம்
வண்ணமாமேதிநெய்யாட்டுநெய்பண்ணிநெய்
விண்ணினர்காணவேவித்துவேஷணமதாம்
புண்ணியகழுதையும் அரிசிமாவன்னியே. 130

### வன்னிஆல்-விளா-சுன்னிமூலைருத்திரயீசானம்

வன்னியரசுவழங்கியஆல்லிளா
கன்னிமாமூலை கருதிநீபார்த்திடு
உன்னியருத்திர உயிறிரிந்திரன்
மின்னியசுபக்கர்மம் வேண்டிவனிருந்திடும். 131

### இந்திரன்திசை-இமதிசை-அக்கினி-வாயுவு-அசுப-கர்மத்துக்கு

இருந்திடுமற்ற யிமதிசைஅக்கினி
வருந்தியமாறி வாய்வறுமூலை
அருந்தியறிந்த அசுபகர்மத்துக்கு
குருந்தொடுசமுதைக் கொடிக்கள்ளியெட்டியே. 132

## கள்ளி-எருக்கு-எட்டி-இச்சி-அத்தி-விடத்தலை கட்டுக்கொடி தம்பனம்

எட்டியெருக்கலம் இத்தியுமத்தியும்
மட்டிவிடத்தலை மாமன்முட்டிடு
கட்டுக்கொடியைக் கடக்கவைதம்பனம்
எட்டுக்குடாதே யெதிரேத்துதேவியை. 133

## தம்பனம்

தேவியைக்கண்டால் தெறிப்படுந்தெய்வங்கள்
வோவியஐயனு மோடுவான்முண்டியே
ஏவியபேயும் அண்டாதுவுன்னிடம்
ஆவியைக்காப்பது அக்காள்திறமாமே. 134

## தேங்காய்-கரு

திறமான தேங்காய் திறந்துகண்விட்டு
முறையோடேமும்மலஞ் சேர்த்துமுடித்து
அறையானதூம புரச்சிலையமுத்தி
பறையாமல்தேவி பதினாயிரமாமே. 135

## பதினாயிரம்-உருசெப்பிக்கவும்

பதினாயிரமுரு பகர்ந்துசுடலையில்
சதிசாமந்தன்னில் தண்ணியிற்போட்டால்
எதிராளிகண்டு யிழப்பானாளெட்டில்
விதிசேருமுன்னே மிளக்கமுளைவிடே. 136

முளைவிட்டுவைத்து முடித்தகருவை
களையப்பாற்போட்டு கல்மிசந்தீர்த்து
பிளையப்பாசமூலம் பிலக்குங்குறிகாண்
இளையாதிடாதே யீசன்றன்னருளே. 137

## இருவிழிப்பாவையறியவும்-நண்டுகுழிமண் கைவிழிமண்

ஈசனுரைத்த யிருவிழிப்பாவையை
.பேசுறேன்கேளு பிறர்க்குவிள்ளாதே
கூசாதேநண்டுகுழி மண்ணும்வேளான்
மாசிலாக்கைவிழி மண்ணுநீவாங்கிடே. 138

## ஓமம்-பெருங்காயம்-கள்ளி-கடுகு-வெந்தயம் அரைப்பு-வஸ்துப்பால்

வாங்கினமண்ணில் வளரோமங்காயந்
தூங்கினவள்ளியுஞ் சோரங்கடுகும்
ஏங்கியவெந்தய மிட்டனர்வஸ்துவின்
பாங்குறப்பாலின் படுமாவிசைத்திடே. 139

## மாவெள்ளை-இருநாவிகூட்டி முப்பத்திரண்டுருப்புஞ் சரியாச்செய்து-கள்ளிப்பால் தடவி-மயானபூசை வெள்ளைபுஷ்பம்-செஞ்சாவல்-வஸ்து-அ-வித்தையும் ஆடும்-மும்மலமாரணம்

இசைத்திடுவெள்ளை யிருநாவிகூட்டி
பகைத்திடுமண்ணைப் பாவைபோற்பண்ணி
இசைக்கவொண்ணாத யிருவிருப்பாவை
வசக்கிருகாதே வகுத்திடுரூபமே. 140

உருவமுப்பத்திரண் டொன்றுதப்பாமல்
யறிவுருசெய்து யதற்குமேல்நித்தம்
திருவுருப்போலே தினங்கள்ளிப்பாலாம்
மருவறத்தீட்டி வணங்கல்செய்வாயே. 141

செவ்வாய்க்கிழமை நடுமத்தியானம்
யவ்வாய்மயானம் படுகுழிதோண்டி
செவ்வையாயங்கே சிலைதனைநாட்டி
முவ்வாறுவேளை முகிப்பாய்பொற்பூசையே. 142

பூசைக்குவெள்ளி புஷ்பமுஞ்சாத்தி
ஆசைக்குச்சாவலதுசிவப்பாகும்
தோசைக்குவஸ்து குருசொன்னபடியாகும்
ஆசைக்குத்தீர வஸ்துவைப்பாயே. 143

வைத்திடுபாவையை மறைவாகவைத்திடு
சத்துருவுக்குத் தானெனச்செய்வையோ
அத்தையெடுத்து ஆட்டிவைப்பாயே
வித்தைகளொட்டும் விளையாடும்பாரே. 144

பாருநீமும்மலம் பாங்காயெடுத்து
சேரும்வழலைச் சேர்த்தங்கரைத்து
யீரங்கெடாமல் மெழுகாயுருட்டி
சூரியன்பாவை துளைதனில்வையே. 145

வைப்பாய்நீவைத்து துளைவழிமூடி
அப்பாலுமாரண மதுசெயவென்றால்
முப்பால்முறைப்படி மூட்டிடுபூசைசெய்ய
இப்பால்விரகிட் டெரிவிழுவானே. 146

## முடக்கஞ்செய்ய

மானேமுடக்க மதுசெய்யவென்றால்
ஊனானபாவை யுருவில்முள்குத்த
தீனம்பிறக்கத் திக்கும்வெள்ளாவிவை
ஞானவாநீயே நயனத்தைக்கேளே. 147

## நயனங்கெட

கேளப்பாபாவை நாட்டிடுநாட்டத்தில்
தோளப்பாகொடுங் கொடுக்கெனச்செய்தால்
நாளப்பாயேழில் நயனம்போஞ்சொன்னார்
வேளப்பாவென்ற விமலன்சந்நாசியே. 149

நாசியிலூண நடுமூக்கழுகும்
பேசியநாவில் பிளவையாம்மூன்று
றாசியமென்ன ராஜபிளவைக்கு
தோசிமுதுகிடந்தொட்டுணுனாலே. 150

## தண்டுபிளவை - துடைவாழை - அரையாப்பு
## உச்சிப்பிளவு - இதுகள்தீரவிபரம்

ஊணியலிங்கத்தி லூணினாற்கேளு
பேணியதண்டுபிளவையுமாகும்
தோணியருடந் துடைதனிலூண
வாணியம்போலே வருந்துடைவாழையே. 151

வாழையரையில் வைத்தூணச்செய்தால்
ஆளரையாப்பு ஆமையோற்காணும்
ஏழையாய்ச்சொன்னே னிந்தமுட்கொண்டு
மூலையிலூண முளக்கும்பிளவையே. 152

பிளவையைத்திறக்கப் பிறந்தநாள்பத்தில்
முனைமுளைவாங்கி முழுகுஞ்சீலத்தில்
களையவேதீருங் கைகண்டவித்தை
உளையமடவார்க்கு வருப்படிசெய்யே. 153

## ஆணுக்குவலதுபுறம் பெண்ணுக்குஇடதுபுறஞ்செய்யவும்

உருபடியாணுக் கொருவலமாகும்
இருப்பதுபெண்ணுக் கிடதுபுறஞ்செய
கருப்படிசேருங் கருகலமொன்று
குருப்பொடிமத்திசங் கொண்டதொன்றாமே. 154

## பெண்குறிக்கும்

ஒன்றானகாரியஞ் சொல்லமறந்தோம்
நன்றாககேளு நடுமத்திசமாய்க்
குன்றாமற்பெண்குறி கூடாதிடுக்கம்
மன்றாச்சொன்ன வகையுரைத்தோமே. 155

## தொழில்செய்யலாகாதபேர்-ஏழை-வேதியர்-மன்னர் கலியாணசொந்தஸ்திரீ-பாலன்பாலர்-குருவும்

முரைத்தாரேவைய ருள்ளதோர்சேதி
யுரைத்தாரேயேழைக்கு வேதியர்மன்னருக்கு
நிரைத்தாரேபெண்ணுக்கும் நீக்கியபாலைக்கும்
உரைத்தாரேகுருவுக்குஞ் செய்யொணாதென்றே. 156

## முள்பிடுங்கக்-கழிப்புசெய்யவும்

ஒன்றானமுள்ளை பிடிங்கியபோது
வண்ணாரமாடன் வாரியேகேழ்ப்பான்
உன்னாதசோற்றிலொருபிடிசோறும்
தின்னாதசாவலுந் திண்ணென்றுபோடே. 157

போடவேமாடன் புலமாடன்வீரன்
ஆடவேவந்த அனுமான்வைரவன்
தேடியமொட்டையன் சின்னொடுகாலனும்
சாடியகாளியுந் தருக்கிநிற்பாளே. 158

## சாந்திசெய்யசகலதுன்பமும்போய்விடும்

காளேபோகாமல் களிப்பொன்றுபண்ணுவாய்
கோளேதுமில்லை குடிகோத்திரத்துக்கும்
வாளவந்தெய்து மனுஷர்சகலர்க்கும்
தோளரசுகாக்குஞ் சொல்லிடுசாந்தியே. 159

சாந்திசெய்தாக்கால் சகலபுழுமாறும்
சாந்திசெய்தாக்கால் சகலநோய்போய்விடும்
சாந்திசெய்தாக்கால் சண்டனுவாரான்
சாந்திசெய்தாக்கால் தவம்பண்டிதர்க்கே. 160

தவம்வேண்டுமானல் தர்மத்தைச்செய்திடு
சுகம்வேண்டுமானல் துதிநிஷ்டைசெய்திடு
தவம்வேண்டுமானால் சனத்தைபிழைக்கவை
தவம்வேண்டுமானால் தணிப்பாய்வெகுளியே. 161

## வெகுளியாய்க்கருவிடாதே-சல்லிகஞ்சொல்லாதே

வெகுளியாயெங்கும் விநயஞ்செய்யாதே
வெகுளியாயெங்கும் விடாதேகருவை
வெகுளியாயெங்கும் விள்ளாதேசல்லியம்
வெகுளியாயாசை விளம்பிடவேண்டாம் 162

வேண்டியவாடை வசியம்விளம்புவார்
தூண்டிலைப்போட்டு விராலைப்பித்தப்பேர்
கூண்டிடுசேரலி கூடாதுமாதுலை
ஆணடவன்பேர் விட்டவன்பேறியாரே. 163

## பெரியோர்கள் கொடிக்கருமாவன்றிகுறியாகமாட்டாது

அறியார்கள்செத்தபின்கருவீரமென்பார்
குறியாமலந்தக்கொடிக்கருமான்றி
சிறியோரோகம்மைத்திரமுள்ளோர்கண்டால்
பரியாசஞ்சொல்லிப் பழித்தழைப்பாரே. 164

## வழலைகரு-சத்திதயிலம்-இறக்கும் விபரம்

அழைப்பார்முன்விசனருவழலைப்பெண்
பிழைப்பாரிதன்றுபிழையார்க்குச்செத்தேன்
இளைபாயவிடாதேயின்னமறியில்
துளைப்பானெனசல்லியம்புகுந்ததுமென்றே. 165

## பூததயிலம்-நெய்வடி

ஒன்றாம்வழலையொண்ணித்துவாங்கி
குன்றாமற்பூரங்கொடுத்தொருபாண்டத்தி
நன்றாகவைத்துநவில் துளை முன்னிட்டு
நன்றானவெள்ளங்கண்வழிசெய்யே. 166

## கணபதிபூசை இது ஆதிகண்கண்டது

நெய்க்குக்கணபதி நேமகஞ்செய்து
மேய்க்குநின்றாட்டு வேண்டுமென்றேத்தி
பொய்க்கும்வினைக்கும் பொருந்தாதியென்று
கைக்குளிருக்கக் கண்கண்டதாமே. 167

தாமேயிருந்த தயிலத்தையின்னம்
நாமேஉருட்ட நயங்கேளுமிப்போ
வேமேமஞ்சள் மெழுகினாற்றாக்கி
வேமேகனக்க வுருட்டிவைசெப்பிலே. 168

செப்பிலிருக்கச் சேதம்வராது
எப்போதாகிலுந் தனக்கேத்தவேளை
ஒப்பியயெளப்போ லுருக்குத்தித்தாங்கினால்
அப்போதெரியும் வழலையருமையே. 169

### வழலையடித்தால் வகைதுகைவேண்டாம்
### புழையநூல் வேண்டாம் படிக்கவேண்டாம்

வழலையறிந்தால் வகைதுகைவேண்டாம்
பழியநூல்வேண்டாம் படிக்கவும் வேண்டாம்
தழவிடுபஞ்சந் தரிக்குமோபூமியில்
அளவிடையணுவள வாகிலுமாமே. 170

### பஞ்சில்-நெருப்பு-அணுவளவுதாக்க-ஐங்காயமாகும்

அணுவளவிட்டால் ஐங்காயமாகுந்
தணுவுளனவர்க்குச் சாற்றினேன் கேளு
நினைவுடன்செய்வாய் நினைவைவிட்டாக்கால்
மனதுகையாது மதிகெட்டமாடே. 171

மாட்டேபிரிக்க வகைசொல்வேன்கேளு
காடுமேடென்ன கதையென்றெண்ணாதே
வாடாவழியே வசவுகேளாதே
கேடேதிரிந்து கரைத்துணைவாங்கே. 172

### கந்தைத்துணிமடிப்பில் சீந்தில்விழுது
### தூம் ஸ்ரீம் ஜும்என்றே ஆயிரம் உரு பேதனம்

வாங்கியதூமடரச் சீலைமடிப்பில்
தூங்கியேசீந்தில் விழுதையும்வைத்து
பாங்குறவந்த பகைவர்பேர்மாறி
தீங்குறச்சீட்டி லெழுதிடிற்சீயென்றே. 173

சீயென்றுஆயிரஞ் செபித்துக்கூறைியில்
சாயும்பொழுதினிற் சந்தைகளையுங்கால்
மாயாமாய்த்தூமென்று மலஞ்சிரிதூவென்று
ஆயிரஞ்செபித்தே யவர்நாமங்கூறே. 174

கூடியபோது குடிபோவான் சண்டையால்
வோடியேவொன்றுக் கொன்றுதலைமாறி
சீறிச்சினந்து –தவிரமாகவே
ஊரைவிட்டோடி யுலைந்திடுவாரே. 175

**சல்லியவேர்வகைதெரியாமற்போனார்கள்தொட்டியப்பூடு**

வாரமாஞ்சல்லிய வேரின்வகையைப்
பேரறியாமல் பிரண்டரானவர்
நேர்நிரையாச நிகழ்த்தியமூல
சோராமற்சொல்லூந் தொட்டியப்பூடே. 176

**தெரிசிங்கித்தயிலம் வயித்தியர்க்கு வேண்டியது**

**தெரித்தால் சகலவியாதியும் வரும்கருகும்**

பூடொன்றுகண்டால் பூதலமீதில்
ஆடலாஞ்சித்து அகத்திலேயனேகம்
வாடவேவேண்டாந் தெரிசிங்கிவண்ணம்
பாடுகிறேன்கேளு பண்டிதனாரே 177

பண்டிதர் தில்லைப் பாற்கள்ளிப்பாலும்
மிண்டியசெங்கொட்டை விரையின்றயிலமும்
திண்டுமுண்டான திருகுகள்ளிப்பால்
கொண்டொன்றாய்க் கூட்டி கௌரியுங்கூட்டே. 178

கூட்டுவாய்க்கருநாபி கூடவேகூட்டி
ஆட்டுவாய்நீர்மேல் நெருப்பிச்சாறிட்டுமே
மூட்டுவாய்செவிநஞ்சு முப்புவரநஞ்சு
தீட்டுவாய்த்தேளுஞ் சிணையுஞ்செந்தொட்டியே 179

தொட்டித்திராவகஞ் செனிக்கவாட்டியே
நட்டுவக்காலிதேள் நல்விஷப்பல்லுடன்
தட்டியிட்டாட்டி தளராமல்சிங்கியை
யெட்டித்தெரிக்க யெண்ணத்துலையாதே. 180

துலையாதஆக்கை சொரிசிரங்காகி
நிலையாதகுட்டமாய் நேத்திரங்கெட்டு
யுலைவாயுடம்பு யுலைந்துதளர்ந்து
சிலையானதேகஞ் சிதைந்துவிழுகுமே. 181

விழுமேயதிகப்பட்ட புண்போலமேனியுங்
கோளுமேகொழுத்துபோய் குட்டமுமாகியே
யெழுமேதடிப்பு யெழுந்துசுணைகெட்டு
யழுமேமனைவியு மக்களுமாமே. 182

மக்களும்பிள்ளையுங் கொள்ளியும்வற்றி
தக்கனுமானாமல் துயிலஞ்செய்யாதே
விக்கினம்வந்து விருதாவிறங்கும்
அக்கரையாக அலையாதேபாரே. 183

அலையாமலின்ன மடக்கமருந்து
மலைதாங்கிவேகும் விடத்தோலின்வேருங்
சலக்கொம்புகொண்டு கன்றவேகெல்லி
யுலையாமல்வேரை யுழுவேற்றிக்கொள்ளே. 184

## தம்பனம்-குளிசம்-கள்ளர்பயமில்லை- கனல் சுடாது

கொள்ளவேசொன்னேன் குறிப்படிரண்டையுந்
தள்ளாமற்பூசித்துத் தாம்பிரத்தகட்டினில்
மெள்ளவேசுத்தி விரும்பிப்பணிந்திடக்
கள்ளர்பயமுங் கனலுஞ்சுடாதே. 185

## விஷம்-குண்டு-அம்பு-சிவயநம-உரு-100

சுடதேவிஷமுந் தூணியும்பானியும்
அடாதேகுழலும் அம்புபடாது
விடாதேகருவை விளம்புறுநூறு
நடாதேசிவய நமவென்றுதானே. 186

## விந்துதம்பனமூலிகை-ஆர்க்குந்தெரியாது-வே-என்றது

தானேவேயென்ற தம்பனமூலிகை
நானே தான்சொன்னே நாடாதிதற்கும்
ஊனே கொடிபோ லுந்தியிலுள்ளது
மானேயுருக்கையில் வாங்கிச்செம்போடுவை. 187

வைத்தகுளிசம் மணிமுன்கிடந்தால்
உற்றதுவிந்து வடனே கழண்டிடும்
மற்றதுபின்னே மாறிக்கிடந்தால்
செத்தாலுமங்கே சிவந்துவிழாதே. 188

## சல்லியர்வேர் வெள்ளிக்கிழமையில்வெண்சாவல்வெட்டி வெள்ளித்தகட்டில் அஷ்டமாசித்தியாகும்

விந்துருசல்லிய வேரையும்வெள்ளிலை
விந்துருகாப்பிட்டு வெண்சாவல்வெட்டியே
விந்துருவாகியே வெள்ளித்தகட்டிலே
விந்துறக்கட்டினால் வேடிக்கையாகுமே. 189

## பெண்கள்வசியம்-சத்துருவசியம்

ஆடுமேயட்டமா சித்தியுந்தானாம்
நாடுவார்பெண்கள் நமஸ்காரஞ்செய்குவார்
ஓடுமேசத்துரு வொருநாளும்வாரான்
தேடுமேவசியஞ் செகச்சாலநூலே. 190

## வெண்கொழிஞ்சிவேர்-சகலவசியம்

நூல்கொண்டுகட்டினால் வெள்ளைகொழிஞ்சியைப்
பால்கொண்டுபொங்கப் பாங்காகப் பண்ணியே
மால்கொண்டுபோன மாருபேர்சொல்லிடில்
கால்கொண்டுவோடி கடுகவருவாளே. 191

## நஞ்சுமனுட ருடன்சேர்த்து-செஞ்சிலையுருட்டி ஞானத்தில்புகையேற்ற விஷமீளும்

வானத்தினஞ்சை மனுடனுஞ்சேர்த்து
பானத்தின்சீலை பாத்தியுருட்டி
ஞானத்திலேத்த நமன்கொண்டுபோன
மோனத்தின்சீவ னோடிவருகுமே. 192

## முட்டையில் தம்பனம்

ஓடியமுட்டையி லூட்டியதம்பனம், பாடியேபிண்டக் கருவும் படித்திடில் வாடிய ஆணும் வரண்டுபிராணன், மோடிவைத்தப்பால் முடிவிழுவாரே. 193

## தொடுகுறிசரக்குகள்விபரம்-யாவருந்தொழ

விழுவாரேமாம்செவிக் கள்ளிச்சார்விட்டு அழுஞ்சலின்வேருமமுக்கிறாகோஷ்டமும், குளாவிந்தமஞ்சளுங்கூட்டியரைத்திடில், தொழுவாரேயாவருந் தொடுகுறிதானே. 194

## ஈஸ்வரமூலி

குறிகண்டோமென்று குலாவுதலாகி வெறிகொண்ட நாய்போல் விள்ளாதேளொள்ளென்று குறிகொண்டமூலியின் வேரைத்தறி கண்டமாகத்தறிப்பதழகே. 195

### மாவென்றுவறிபழகாதபேர் பழகுங்கரு

அழகானமூலித் தரிக்கையில்மாவென்று புளகமாய்ச்சொல்வார் புரோசனங்கண்டுமே, பழகாதபேரும் பழகுங்கருத்தான், குளவாமற்சீவ னிறப்பானெதிரியே. 196

### எதிரிபட விதுரன் பச்சிலைமூலம்

எதிரிப்பட்டானே யினிமேற்காரியம், உதரிவெற்பார யோடவுங் கண்டால் ததிரியாக்காகே தகையாதுநீபோய், விதுரனைப்போலே வில்முறித்தானே. 197

வில்முறித்தார்க்கு விஷ்ணுமூலங், கல்லடைத்தார்க்குக் கருதுஞ்சீ தேவி, வெல்வறிப்பூடுவெல்வலியாதி, கொல்வலிப்பூ கெல்லும்பச்சிலையே.

### அச்சடித்து துறவுகோல்

பச்சிலைமூலம் பாடினோங்கேளு, அச்சுவச்சதை யடுப்பதுபோல, பச்சிலைவைத்த பொருளைப்போல்வாங்கு, துச்சிலைக்கொண்டு துறவுகோல்பூட்டே. 199

பூட்டினோமிந்தப் பொன்னிருநூறுங் கூட்டினோமந்திரங் குருவின் கருமுறை, தீட்டினோங்கருக்கிடைதெரிந்தமுறைப்பாடு. வாட்ட முமில்லல நமனென்றபேர்க்கே. 200

### காமவிரையறுப்பது

பேர்பெறஆரேன் பிறக்கினைவானாய், நேர்பெறச்சொல்ல நினைவாயறிவாய், சீர்பெறவாலையைச் சிந்தித்துநில்லு, ஏர்பெறுகாம விரையறுப்பாயே. 201

அறுப்பான்விளைந்தபருவத்திலாசான், நிறுப்பான்திராசு நிறையெனக் கன்மம், பொருப்பான்றவத்தைப்பூட்டியபேர்க்கு, வெறுப்பான்சகல விரே தமும்பாரே. 202

### பாவஞ்செய்யாதே ஆசானையடுத்துநீபாரு-64-தெரிந்துகொள்

பாரினிலிந்த முறைப்படிப்பார்த்து, தேருநீபாவஞ்செய்யவும் வேண்டாம், ஆருநீபாரு அறுபத்துநாலும், நேரிருநூருநிகண்டுமுற்றே.

## அகத்தியமுனிவர் அருளிச்செய்த ஜாலநிகண்டு
## முற்றிற்று

******

## அகத்தியர் கும்மி

கும்மியடி பெண்ணே கும்மியடி
கொங்கை குலுங்கவே கும்மியடி
நன்மை விநாயகன் பாதத்தைப் போற்றியே
நாடிக் கும்மி அடியுங்கடி
புகழ்ந்தோடிக் கும்மி யடியுங்கடி 1

ஓடி மன்மதனைப் புகழ்ந்து ரதி
உண்மையதாக நன்மையுடன்
கோடிக்காலம் பூசை. செய்தந்த
கொற்றவனின் மனம் ஒத்திடவே பின்னும்
நந்தியவன் பாத முத்தியிட்டான். 2

முத்தியிட்டான் வெகு மோகமுடன்
முன்னின்றி இருகையும் கூப்பிவிட்டு
நத்தி யடியோன்மேல் கிருபைசெய்து
எந்தன் நாயகனே மனமுத்திடுவீர்
வெகு தாயகமாய் மொழி சாற்றிடுவீர். 3

தாயகமாய் புவியின் வாழுகின்ற
தையலார்கள் பிரசவித்தால்
நேயமுடன் கருக்கோளரையில் வாயு
நீக்கு அவிழ்தமேயுரைப்பீர் எனஅப்
போக்கு முறைதனைத் தான்உரைப்பீர். 4

தானுரைப்பீர் எனும் தையலுக்குச்
சாற்றிட வேண்டுமென்றே நினைத்து
வாணி தங்கையைப் போற்றி யரைத்திட
வாழ்த்தி தன் நாத்தியைப் போற்றி செய்து
வெகு நேர்த்தியாய் வெகு தோத்திரமாய் 5

தோத்திரமே செய்து கேட்கையிலே அந்தத்
தோகை தன் நாயகனைக் கேட்டுரைப்பாள்
நேர்த்தியதாய் நாற்பத்தைந்து அவுடதம்
நிச்சயமாகவே சொல்லுகிறேன் இது
உச்சிதமாய்த் தோழிப் பெண்ணே. 6

சொல்லு இலவம் பிசின் ஒருசேர்
நாழி வெந்தயம், துத்தி, கடலையும்
நல்ல சமுத்திராப்பச்சையுடன் அதன்
சொல்லு மேலங் கிராம்புடனே. 7

பூவுடனே ஏலமும் சாலா மிசிரிப்
போற்று மதுரம் சிலாசத்துடன்
தாவிய கல்மதம் கல்நார் நாகப்பூ
தன்னுடனே அக்காரம் கண்டத்திப்பிலி அதன்
பின்னோடு ஆவாரையும் வாகைப் பிசின். 8

பிசினும் வகைக்கு அரைப் பலமாம்
அதன் பின்னும் தலக்காய் சிவகரந்தை
நிசமான சோம்புடன் பூனைக் காலிவித்து
நின்றிடும் மேகக் கரந்தை விதை இதில்
ஒன்றிடு நத்தையின் சூரிவித்தே. 9

வித்துடனே பலம் ஒன்றெடு நிலைரோசனை
கேசா கால் பலமாம்
பத்துப்பனை தண்ணீர் விட்டபின் முருங்கையும்
அத்துட வித்து நீர் முள்ளி அதி
ஒத்த கொண்ட சின்னி தன் கிழங்கே. 10

தன்னுடன் தானியும் கொட்டிக் கந்தம்
தாங்கு பேரீஞ்சும் இரண்டு பலம்
மின்னிய கசகசா ஒன்றதே சேர்த்தும்
விட்டிடு சீனியும் மூன்று சேர் அதில்
வட்டமாய்க் கொப்பரை ஐந்துடனே. 11

ஐந்துடனே பசுவிட நெய் அதுவும் அச்
சேர் மூன்று அரைச் சேர் தேன்
நஞ்சகத்தி இதைப் பாகு செய்து நீ
நாட்டிடு கொப்பரைத் தூளையுமே அதின்
மேலிடு மற்ற மருந்ததுவே. 12

இட்டுக் கிளறியே வாடு செய்து
ஏந்திழை மார் கறுத்தால்
பெற்ற வயிற்றில் வியாதி எல்லாம் அறும் மன
உள்ளத்து நோயை அகற்றிடுமே. 13

அகற்றிடும் என்றுதான் பேசுகின்ற
அன்பான சூதக வாயுவுடன்
நகத்திய ஈளை இளைப்பு பேதியும்
நாடாது வாதம் இருமலுடன் இன்னம்
கோடான கோடி பிணி அகலுமே. 14

பிணியறு என்று தான் பேசுகின்ற
பெண்ணினைப் போற்றிச், சுதனுக்கீயத்
துணிவாய் வணங்கி, தன் தோகைக்கு உரைத்திடச்
சொன்னான், முனிக்கு என்று ஓதுங்கடி நீங்கள்
நன்றாகவே கும்மி பாடுங்கடி. 15

❖❖❖❖❖❖❖❖❖❖

## அகத்தியர் கும்மி - உரை

பெண்களே, கைகொட்டி, மகிழ்ச்சியுடன் நன்மை தரும் கணபதியின் திருவடிகளை வணங்கி, கும்மியடியுங்கள். இரதிதேவியின் கணவன் மன்மதன் சிவபெருமானின் நெற்றிக் கண்ணால் அழிந்தான். அவனை உயிர்ப்பிக்க இரதிதேவி கோடிக்கணக்கான ஆண்டுகள் சிவபெருமானை வணங்க, அவரும் மனம்மாறி, இரதிதேவியின் வழிபாட்டை ஏற்றுக் கொண்டு, அருள்புரிகின்றார். அவளுக்கு நந்திபெருமான் மூலம் மகப்பேறு பற்றிய செய்திகளைக் கூறுகின்றார். நந்திபெருமான் மூலம் மகப்பேறு பற்றிய உண்மைகளை இரதி தெரிந்து கொண்டு, அதனைப் பாடல்கள் மூலம் உலகத்துப் பெண்களுக்குக் கூறுவதாக இந்நூல் உள்ளது.

பூமியைத் தாய்வீடாகக் கொண்டு வாழும் பெண்கள்,மகப்பேறுக்குப் பின்னர், கருப்பையில் உள்ள காற்றை நீக்கும் வழியை இதில் கூறப்பட்டுள்ளது.

கலைமகள் கணவனான பிரம்ம தேவரை மருத்துவம் பற்றிக்கேட்க, பிரம்மதேவர் 44 வகை மருந்துகளைப் பற்றிய நூலைத் தருகின்றார். கலைமகள் என்பது சரஸ்வதி, இது வல்லாரையை மருத்துவத்தில் குறிக்கும். பிரம்ம தேவரின் உடன்பிறந்தாள் பிரமி, பிரமி என்பது மருத்துவ மூலிகையாகும்: வாணி என்ற பெயரால் வல்லாரைக் கீரையையும் பிரம்மதேவரின் உடன்பிறப்பாகப் பிரமி மூலிகையையும் குறிக்கும். கலைமகளின் மருமகள் இரதிதேவியாவாள். சரசுவதி என்ற வல்லாரை மூளையைப் பலப்படுத்தி, அறிவாற்றலைப் பெருக்கும் தன்மையது ஆகும்.

| | | |
|---|---|---|
| 1. இலவம் பிசின் | - | 1 சேர் (280 கி) |
| 2. வெந்தயம் | - | நாழி (1.3 லிட்டர்) |
| 3. துத்தி | - | |
| 4. கடலை | - | |
| 5. சமுத்திராப் பச்சை | - | வகைக்கு 1/2 பலம் (17.5கி) |
| 6. ஏலம் (சிறு) | - | " |
| 7. கிராம்பு | - | " |
| 8. ஏலம் | - | " |
| 9. சாலாமிசிரி | - | " |
| 10. அதிமதுரம் | - | " |
| 11. சிலாசத்து | - | " |
| 12. கல்மதம் | - | " |
| 13. கல்நார் | - | " |
| 14. சிறுநாகப்பூ | - | " |
| 15. அக்ரகாரம் | - | " |
| 16. கண்டத்திப்பிலி | - | " |
| 17. ஆவாரை | - | " |
| 18. வாகைப்பிசின் | - | " |
| 19. தலக்காய் | - | 1 பலம் ( 35 கி ) |
| 20. சிவகரந்தை | - | " |
| 21. சோம்பு | - | " |
| 22. பூனைக்காலி விதை | - | " |
| 23. கரந்தை விதை | - | " |
| 24. நத்தை சூரி விதை | - | " |
| 25. கோரோசனை | - | 1/4 பலம் ( 8.75 ) |
| 26. கேசா | - | |
| 27. பனை | - | |
| 28. தண்ணீர் விட்டான்கிழங்கு | - | |
| 29. முருங்கை | - | |
| 30. முருங்கை விதை | - | |
| 31. நீர்முள்ளி | - | |
| 32. ரேவல் சின்னி கிழங்கு | - | |
| 33. தான்றிக்காய் | - | |
| 34. கொட்டிக்கிழங்கு | - | |
| 35. பேரீச்சை | - | 2 பலம் (70 கி) |
| 36. சீனி | - | 3 பலம் (105 கி) |

37. கொப்பரைத் தேங்காய் - 5
38. கசகசா - 1 பலம் (35 கி)
39. பசுநெய் - 3 பலம் (105 கி)
40. தேன் - 1/2 சேர் (140 கி)

செய்முறை

கடைச்சரக்குகளை முதலில் தூய்மை செய்த பின்னர் இடித்துத் தூளாக்கவும். கொப்பரைத் தேங்காயைத் துருவி எடுத்து சீனியைப் பாலில் கலந்து கொண்டு, அடுப்பேற்றிக் காய்ச்சவும், பாகுபதம் வரும் சமயம் பொடியையும், தேங்காய்த் துருவலையும் தூவிக்கிளறவும். நெய்யைக் கலந்து கொள்ளவும். பதத்தில் இறக்கிக் கொண்டு தேனைச் சேர்த்துக் கலக்கவும். இலட்டு போல் உருண்டை பிடிக்கவும்.

தீரும் பிணிகள்:

தாய்மார்களுக்கு ஏற்படும் கர்ப்பப்பை தொடர்பான பிணிகள், உளப்பிணிகள், சூதகவாயு, ஈளை, இரைப்பு, கழிச்சல், வாதம், இருமல் போன்ற பல்வேறு பிணிகள் நீங்கும்.

❀❀❀❀❀

## அகத்தியர் வைத்திய தர்க்கம் - 25

*சீர்பொருந்தும் சாத்திரமும் மருந்து வைப்பு*
*தேவி அங்கமான பொருள் பலவும் சொல்லி*
*ஒரு பொழுது எழுத்தாணி ஓலை அம்மி*
*இயல்பான கருவிமுதல் பையக் கூறைசெப்பும்*
*கூறோடே சாத்திரங்கள் சொன்னா னானால்*
*குருவாகும் அவருடனே எதிர்க்க வேண்டாம்*
*தார்பொருந்தும் சாத்திரங்கள் சொல்லாவிட்டால்*
*சண்டாளப் பயல்களுட பைய வாங்கே.* 1

சீரான அறிவும், மருந்துகளைத் தயாரிக்கும் பொருட்கள் பலவற்றை பற்றி சொல்லுகின்றேன். எழுத்தாணி, ஓலை, மற்றும் இயல்பான கருவி அறிவுடன் நூல்களைச் சொல்லும் ஆசிரியரைப் பகைக்க வேண்டாம் இவற்றைப் பற்றி எதுவும் கூற இயலவில்லை என்றால், அவர்களைக் கீழ்மக்களாகக் கருதி விலகவேண்டும்.

*பறையாதே எவர்களுடனும் எதிர்க்க வேண்டாம்*
*பன்னிரண்டு பிழைநீக்கித் தர்க்க நூலைக்*

குறையாமல் உதித்தது நீ விருதை வாங்கிக்
கொள்ளவே அவருடைய கிருபம் போனால்
நிறையாகச் சீடனாய் வந்தா னானால்
நேர்மையாகச் சொல்லி விருதை ஈந்து
துறையாக என்னூலை உரைத்து வைப்பும் சொல்லி
சூட்சமாய் அவர்மனத்தை அறிந்து சொல்வீர். 2

தேவையில்லாமல் யாரையும் எதிர்க்க வேண்டாம் பன்னிரண்டு அல்லது பதினாறு பிழைகளை நீக்கி இந்த நூலை இயற்றியுள்ளேன். இந்நூலைப் படித்து நிறை அறிவுபெற்ற மாணவனாக மாணவன் இருந்தால் அவனுக்குப் பட்டம் வழங்கி முறையாக இந்த நூலைத் தந்து செய்முறைகளையும் நுணுக்கமாக அறியச் செய்யவேண்டும்.

நாராசம் பிடித்தகைக்கு வகைக்குச் சொல்லும்
நன்றாக இடதுகையில் ஓலை சொல்லும்
ஓராதே ஊன்றினதுக்கு உண்மை சொல்லும்
ஒட்டிமுடிந் தெழுந்ததற்கு ரூபம் சொல்லும்
பாராதே அங்குறித்த வசனம் சொல்லு
பாராதே தடக்கேன் சென்றிருந்த வடிவைச் சொல்லும்
நேராக நின்றெழுத்தின் நிலையைச் சொல்லும்
நிச்சயமாய் அறிவென்னும் பொருளைச் சொல்லு. 3

எழுத்தாணியாய் எழுதிய வகைகளைக் கூறுவாயாக. நன்றாக இடது கையில் உள்ள ஓலைச் சுவடியானது கூறும். உண்மையைக் கூறும் பேச்சானது இந்நூல் பற்றிக் கூறும். இந்நூலின் அமைப்பைக் கூறும் அறிவென்ற பொருளைக் கூறும். மந்திர எழுத்துக்களைக் கூறும்.

நாராசம் பிடித்தகையை ஞான மூர்த்தி
நன்று நீரிடத் தொகையில் ஓலை சந்நி
ஏறாதே ஊன்றினது உண்மை ஞானம்
ஒட்டிமுடித் தெழுந்ததுவே ரூப யோனி
பாராம லங்குறித்த வசனம் வாயும்
பார்தடங்கோன் சென்றடைந்த வடிவு லிங்கம்
நேராக நின்றெழுத்தை வடிவா காரம்
நிச்சயமா அரியென்னும் பொருளும் நீயே. 4

நாராசமே எழுத்தாணி, அறிவு சிவமாகும், ஓலையானது சக்தியாகும். எழுத்து இலிங்கம், அரிஎன்ற திருமாலின் பொருள் நீயாகும்.

நலிந்திருக்கும் செப்பேது அடைப்பு மேது
நான்முகத்தோன் வகுத்தவகை சொல்லு

குளிர்ந்திருக்கும் அம்மிக்கும் பேர்தான் என்ன?
குவிந்தரைக்கும் குழவிக்கும் பேர்தான் ஏது
தெளிந்தபிடி விரல்தனக்குப் பேர்தான் ஏது
தேர்ஏகமுறு மருந்தேது தெளிந்து சொல்லு
மொழிந்துரைக்கும் பண்டிதரே இந்த நூலை
மோசம்வராது இன்னதென்று மொழிந்திட்டீரே. 5

அம்மியின் பெயர், குளிர்ந்திருக்கும் குவிந்து உள்ள குழவியின் பெயர், பிடிக்கும் விரலின் பெயர், மருந்தின் பெயர் ஆகியவற்றை அறிந்து கூறுவாயாக. இப்புத்தகமானது படித்து, அறிய, வாழ்க்கைக்குக் கெடுதல் வராது என்று அறிவீர்களாக. அம்மி என்பது யோனியாகும். குழவி என்பது ஆண்குறியாக மறைமொழியாகக் கூறப்பட்டுள்ளது.

குளிர்ந்திருந்த அம்மியது சந்தி யாகும்
குவிந்துநின்ற குழவியது லிங்க மாகும்
தெளிந்தரைக்கும் விரல்ஐந்தும் பஞ்ச பூதம்
திரேகமுறும் மருந்தெல்லாம் சிவமே யாகும்
நளிந்திருந்த செப்புமுதல் அடைப்பு தானும்
நாதருடை சிகாரத்தில் கபாட மாச்சு
மொழிந்துரைக்கும் பண்டிதரே இந்த நூலை
மோசம்வராது இன்னதென்று மொழிந்திட் டீரே. 6

அம்பியானது குளிர்ச்சியான சத்தி. அம்மியின் மீதுள்ள குழவிதான் லிங்கம். செயல்களைச் செய்யும் விரல்களே ஐம்பூதங்கள். உடல் சிவபெருமான்.

பிடித்துரைக்கும் அகல்தனக்குப் பேர்தா னேது?
பிறமுலை தேவதையின் பேர்தா னேது?
அடுத்தருந்த முலைப்பால்தான் அதுதா னேது?
அணிவிரலும் பெருவிரலும் அறிந்து சொல்லும்
தடித்திருந்த கயிறேது பைதான் ஏது?
தவறாமல் சாத்திரங்கள் தானே சொல்லும்
படித்தறியும் பண்டிதரே. இந்த நூலைப்
பழுதறவே இன்னதென்று பகர்ந்தி டீரே. 7

நாடியால் அறிந்து வாழ்நாளைக் கூறும் கயிறின் இருப்பிடம் (காற்று) பையின் இருப்பிடம் இவற்றையெல்லாம் கூறும் அறிவுநூல்களைப் படித்து அறியக் கூடிய மருத்துவர்களே, இப்புத்தகம் குற்றமற்றது என்று எல்லோருக்கும் கூறுங்கள்.

*பிடித்துரைக்கும் அகல்தனக்குப் பேர்தான் மாயன்*
*பிறமூல தேவதையின் ஈஸ்வ ரன்தான்*
*அடுத்தருந்த முலைப்பால்தான் அமிர்த மாகும்*
*அணிவிரலும் பெருவிரலும் ஆன சக்தி யாகும்*
*தடித்திருந்த கயிறதுதான் ஆகு வாகும்*
*தவதை பயலைய குண்டம் தானேயாகும்*
*படித்தறியும் பண்டிதரே இந்த நூலைப்*
*பழுதறச் சொல்லியபின் பையை வாங்கே.* 8

அகல் என்ற மணிவிளக்கே மாயன். மூல தெய்வம் சிவபெருமான். தாய்ப்பாலே மருந்து. அணிவிரல் எனும் சுட்டுவிரல் மற்றும் கட்டைவிரல் சிவ சக்தியாகும். கயிறு கயிலைமலையாகும்.

*உரைக்கின்ற செந்தூரம் ஆவ தேது?*
*உத்தரச கந்திமுதல் தார மேது?*
*அரைக்கின்ற மண்முதல் சீலை யேது?*
*அதுநடுவே குப்பிமுதல் சலாகை யேது*
*எரிக்கின்ற அடுப்புமுதல் தீப மேது?*
*நெகுளாத மணலேது தாழி யேது?*
*வரைக்கடங்காப் பண்டிதரே இந்த நூலை*
*வகைபிரித்து இன்னதென்று வகுத்தி டீரே?* 9

செந்தூரத்தின் தன்மை இரசம், கந்தகம், தாளகம் போன்ற பாடாணங்களின் இருப்பிடம் அரைக்கின்ற மணல், சீலையின் இருப்பிடம் அதற்கு நடுவில் கண்ணாடிக்குப்பி, அளவிடும் கோல் ஆகியவற்றின் இருப்பிடம் அடுப்பு, விளக்கு ஆகியவற்றின் இருப்பிடம் மணல், மண்பானைகளின் இருப்பிடம் தெரிந்த எல்லையில்லாத அறிவு படைத்த மருத்துவர்களே, இந்தநூலைப் பல்வேறு பிரிவுகளாகப் பிரித்துப் பாருங்களேன்.

*உரைக்கின்ற செந்தூரம் சிவமும் ஆச்சு*
*உற்றஅரி கந்திரச மூவாறு ஆகும்*
*அரைக்கின்ற மண்முதல் சீலை சந்நி*
*அடைக்குப்பி சலாகைமுதல் மேரு வாகும்*
*எரிக்கின்ற தீயடுப்பு வட்வை யாச்சு*
*எருளாத மண்ணுஒரு வேத மாச்சு*
*வரைக்கடங்காத் தாழியது ஆழி யாச்சு* 10
*வகைசொல்லிப் பண்டிதரே மருந்தை வாங்கே.*

செந்தூரமே சிவபெருமான் கந்தகம், இரசம், ஆகியவையே

மும்மூர்த்தி மண்சீலை என்பது சக்தி. மருந்துகளை அடைக்கும் கலம், கிளறும் உலோகக் குச்சி மேருமலையே. எரிகின்ற தீயானது வடவைத் தீயாகும் வேதமே கடல். மண்குடமாகும்.

*பொற்பணியாய்ச் சமைந்தசெப்பு பேர்தா னேது?*
*பொறியான வெள்ளியுட செப்பைச் சொல்லும்*
*நற்பணியாம் சமைந்ததங்கச் செப்பென்னா?*
*நலம்பெரிய சாத்திரங்கள் நன்றாய்ச் சொல்லும்*
*தற்பணியாம் போகாமல் நிலையாய்ந்து ?*
*தரணிதனில் இன்னதென்று தரித்துப்பார்த்து*
*நற்பணியும் பண்டிதரே இந்த நூலை*
*நலமாக வாய்திறந்து சாற்று வீரே.* 11

பொன்னால் செய்யப்பட்ட நகைகளின் பெயர் வெள்ளிச் செம்பு மற்றும் தங்கச் செம்பு ஆகியவற்றைப் பற்றி மருத்துவ நூல்களை ஆய்வுசெய்து, அணிந்து இந்நூலைப்பற்றி நன்றாகக் கூறுவீர்களாக.

*பொற்பணியாம் சமைத்தசெப்பு இறையோன் மேரு*
*பேசறியான் வெள்ளியென்றால் வேதம் பாதி*
*நற்பணியாம் சமைத்தலிங்கம் ஈசன் விந்து*
*நலம் பெரிய சாத்திரங்கள் பரத்தின் வேதம்*
*நற்பணியாய்ப் போகாமல் இந்த நூலைச்*
*சாற்றினேன் விருதுதன்னை வாங்கிக் கொள்வாய்*
*நற்பணியும் பண்டிதரே, சொல்லா விட்டால்*
*நலமாய்ச் சீடனாய் வாங்கி டாயே.* 12

மேருமலையே பொன்னாலான நகைகள். வெள்ளி என்பது பாதி வேதம் (இரசவாதம்). இலிங்கம் இரசம் வடித்தல், ஆகியவை பற்றி அறிந்து கொண்டு, விருது பெறுவீர். இயலாமல் போனால் நல்ல குருவின் மாணவனாக இருந்து தேர்ச்சி பெறுவீர்.

*அஞ்சுருவாய் எடுத்ததொரு பஞ்ச லோகம்*
*அனைத்திருந்த செப்புக்கும் பேர்தான் கேளு*
*கஞ்சமடா ஆகாயம், சிவப்பு வன்னி*
*கருவான லோகம் - வாயுவே ஆகும்*
*வஞ்சமறப் பித்தளையும் உறுதியாகும்*
*வேதாந்த திராஎன்றால் அப்பின் கூறு*
*நஞ்சகற்றும் பண்டிதரே இந்த நூலை*
*நாடறிய இன்னதென்று நவிலு வீரே.* 13

உலோகங்கள் ஐந்துவிதமாகும். செம்பின் பெயரைக் கேட்பீர் கருமையான உலோகமான இரும்பு வாயு. பித்தளை வன்மையானது. தரா உலோகம் நீரின் கூறு. இந்நூலை நன்கு கற்று நாட்டிலுள்ளவர்களுக்கு எடுத்துக் கூறவேண்டும்.

*கஞ்சம்என்ற ஆகாசம் என்றதைத்தான் சொல்லும்*
*கருஞ்செம்பு வன்னிநீர் அதைச் சொல்லி*
*மிஞ்சவே தராவுக்கு அப்பின் கூறு*
*விதமான நிறத்தைஇயல்லாம் விளங்கிப் பார்த்து*
*ஒஞ்சாமல் எடுத்துரைக்கும் வைத்தியரே*
*ஒவ்வொன்றும் இன்னதென்று உரைத்திட் டீரே.*
*வஞ்சமென்று லோகத்தின் வாயு என்னா?*
*வகுத்தானே பிருதுவிக்கு நிறத்தைச் சொல்லு* 14

வெங்கல உலோகமே வானம். கருமையான செம்பு தீ. தரா நீர் வஞ்சம் (இரும்பு, கருவங்கம்) காற்று.

*கஞ்சமென்ற ஆகாசம் புகைபோல் மேனி*
*கருஞ்செம்பு நிறமென்றால் சிவப்பே யாகும்*
*வஞ்சமென்ற லோகந்தான் கறுப்பே யாகும்*
*வறுத்தாழி பிருதுவியென்றால் பொன்போல் மேனி*
*மிஞ்சவே தாராவுக்கு அப்பின் கூறு*
*விதமான படிகம்போல் நிறத்தைச் சொன்னேன்*
*ஒஞ்சாமல் எடுத்துரைக்கும் வைத்தியரே*
*ஒவ்வொன்றா இன்னதென்று பணிந்து கேளே* 15

வெங்கலம் என்ற வானம், புகைபோல உடல் கொண்டது. செம்பு சிவப்பு, வஞ்சம், கறுப்பு பொன்நிலமாகும். தரா நீரின் நிறமான வெண்மை.

*திடமான கஞ்சத்தின் வீட்டைச் சொல்லு*
*சிகப்பான தாம்பூர ரேகை யென்னா?*
*இடமான அயத்திரா ஊட்டைச் சொல்லும்*
*இயல்பான பித்தளை ரேகை யென்னா?*
*சடமான தராவுக்கு ரேகை சொல்வாய்*
*தருவாகும் அஞ்சுனுடைய வீட்டைச் சொல்லி*
*திடம்பெரிய வைத்தியரே. இந்த நூலைச்*
*சூட்சமா இன்னதென்று தொகுத்திட் டீரோ.* 16

திடமான வெங்கலத்தின் இடம்பற்றித்தெரியுமா? சிவப்பான தாம்பிரத்தின் மீதுள்ள ரேகைகள் என்ன? இரும்புத்தராவின் இடம் எங்கே

தராவின் வரிகள் என்ன? மரமாகும் ஐந்தின் இடத்தைக் கூறி, இந்த நூலை நான் நணுக்கமாகத் தொகுத்துள்ளேன்.

திடமான கஞ்சத்தின் வீடு வட்டச்
சிகப்பான தாம்பிர மூன்றுகோண
இடமான அயன்வீடு அறுகோணம்
இயல்பான .......... தின் கோண மாகும்
சடமான தராவுக்குப் பிறைபோ லாகும்
தருவான அஞ்சினுட சக்கரத்தின் வீடு
திடம்பெரிய வைத்தியரே இந்த நூலைச்
சூட்சமாய்ப் பணிந்து நீ கேளே. 17

வெங்கலத்தின் இடம் வட்டமானது. செம்பு முக்கோணமானது இரும்பு அறுகோணமாகும் இயற்கையாக .............. கோணமாகும். தரா பிறைபோலாகும். அவை கற்பக மரத்தைப் போன்ற உலோகங்கள்: மருத்துவர்களே, நீங்கள் இந்நூலை நுணுக்கமாகக் கேட்பீர்களாக.

திடம்பெரிய கஞ்சத்தி னெழுத்தைச் சொல்லு
சிவப்பான தாம்பூர அச்சரத்தைச் சொல்லு
ஏடறிய லோகத்தின் எழுத்தைச் சொல்லு
இயல்பான பித்தளை எழுத்தைச் சொல்லுவாய்
கோடறிய தராவுக்கு அச்சரங்கள் சொல்லு
குருவாகும் பண்டிதரே தொகுத்துப் பார்த்து
நாடறிய இந்நூலின் எழுத்தைச் சொல்லி
நயந்துநிற மருந்தடைத்த செப்பு வாங்கே. 18

கஞ்ச உலோகத்தின் வரிகள் செம்பின் வரிகள் ஆகியவை குறித்து நூல்களின் வழியாகச்சொல்ல வேண்டும். பித்தளையின் வரிகள் தராவின் வரிகள் பற்றியும் கூறவேண்டும். ஆசிரியர் நிலையிலிருக்கும் மருத்துவர்கள் பணிவாக இவ்வுலோகங்களாலான சிமிழை வாங்க வேண்டும்.

தேடறிய கஞ்சந்தான் யகார மாச்சு
தீயான தாம்பூர சிகார மாச்சு
ஏடறிய லோகந்தான் வகார மாச்சு
இடுதாளை பிருதிவியும் நகார மாச்சு
கோடறிய தராவுக்கு மகாரம் சொன்னேன்
குருவாகும் உருவான பஞ்ச பூதம்
நாடறிய இந்நூலில் இன்னவென்று சொல்வேன்
ஞானமில்லா வைத்தியரே, வணங்கிக் கேளே. 19

காண்பதற்கரிய வெங்கலம் ய என்று உள்ளது. செம்பு சி என்ற எழுத்தாக உள்ளது. உலோகம் 'வ' என்பதாக உள்ளது. பூமியான பொன் ந என்ற எழுத்தானது தரா என்ற உலோகத்திற்கு புளிச்சுவை எல்லாவற்றிற்கும் மூலமாகிய குருவாகும் ஐம்பூதங்கள்.

*மரத்தினால் கடைந்திசெப்பு வகைதான் சொல்லு*
*வளர்மூங்கில் ஈரலுக்கும் வகைதா னென்ன?*
*திறத்தினால் மிளாவிடைய கொம்பைச் சொல்லு*
*திறமான மேசகுலச் செப்பைச் சொல்லு*
*பரத்தினால் எழுந்திதொரு பசுவினத்தின் சொம்பு*
*பாங்கான கருவியுடன் மூலம் சொல்லு*
*சிரத்தினால் எழுந்திதொரு கரியின் கொம்பைத்*
*திடம்பெரிய வைத்தியரே செப்பு வீரே.* 20

மூங்கில், மான் கொம்பு, எருமைக் கெம்பு, பசுவின் கொம்பு, யானைத்தந்தம் ஆகியவை மரத்தால் செய்யப்பட்ட சிமிழ்களின் வகைகளாகும்.

*மரத்தினால் கடைந்த செப்புரி .............கன்மூலம்*
*திறமர்தி குலந்தனக்கும் பேர்தான் கேளும்*
*வளர்மூங்கில் ஈரல்என்றால் மாலி னோசை*
*சிரத்தினால் கடைந்த மிளாவி சுபமூர்த்தி*
*திறமான மேசகுல அங்கோல பீடம்*
*பரத்தினால் எழுந்திதொரு பசுவின்தான் நந்திஈசர்*
*பாங்கான கறியென்றால் வானோ ராகும்*
*சிரத்தினால் எழுந்திதொரு கரியின் கொம்பைச்*
*சொல்லுவேன் கயுமுகனுடைய மூலந் தானே.* 21

மூங்கில் செப்பு பெருமை தரும். மானின் மங்கலத்தைத்தரும். எருமைக்கொம்பே அழகிய கோலங்களடங்கிய மேடை. பசுவின் கொம்பே நந்தீசர். தந்தமே விநாயகரின் அடிப்படை.

*ஓங்குகின்ற தாம்பூல மகிமை சொல்லு*
*விளங்குகின்ற பொருளதுதான் அறிந்து சொல்லு*
*நீங்குகின்ற பிணிசாமம் ஏது சொல்லும்?*
*நினைவுதான் விசுவாசம் ஏது சொல்வாய்?*
*ஓங்குகின்ற சாத்திரத்தின் உண்மை சொல்லு*
*ஒருகோடி சாத்திரங்கள் ஆராய்ந்து சொல்லு*
*ஏங்குகின்ற வைத்தியரே இந்த நூலை*
*இயல்பாக இன்னதென்று உரைத்திட் டீரே.* 22

தாம்பூலத்தின் பெருமை என்ன பொருளையறிந்து கூறுக. பிணிவிலகும் சாமம் என்ன? நினைவின் பற்றுதல் என்ன? கோடிக் கணக்கான அறிவு நூல்களை ஆய்ந்து கூறவேண்டும்

கடவுளுரைதான் தனக்கு நந்தி கவியார்போது
அடவுடன் நந்தி கயிலாதமில்லை என்று
திடவுடன் அரனார் தான் முத்திரி
சடைதான் அதனை ஊன்றி முமனே என்றி
சொல்லு முளைத்தது பிரம்புதானே.

..........................................

..........................................................

................................................ 23

பண்டிதரே பையெடுக்கும் பரிசைக் கேளீர்
பாதாதி கேசமுதல் வெள்ளைச் சீலை
மின்றியறு நாலு விரலகம் சுற்று
மிகுதி பதினாறு விரலகம் கூட்டி
பண்டித விதிப்பயன் படிகயிறு நாற்சாண்
பரமசிவன் தானுமன்னான் பகர்ந்த நூலைக்
கண்டவிழி மாதுமையாள் உரைக்க
அருள்முனிவோர் ஆய்ந்து எடுத்தப் பையதாமே. 24

காற்றுப் பையின் பரிசைக் கேட்பீர்களாக. தலை முதல் கால்வரை வெள்ளையான துணியாகும் நான்கு விரல் அகலம் சுற்றி உள்ளது. மேலும் 16 விரல் அகலம் சேர்த்து (20 அகலம்) உள்ளது. சரப்பயிற்சி பற்றியவைகளை பரமசிவன் தானும் பார்வதிக்கு கூற பார்வதியாரும், அருள் பெற்ற முனிவருக்கு எடுத்துக்கூற முனிவர்கள் ஆய்ந்து இந்நூலைச் செய்தார்கள்.

சீலையாம் சிவமே நல்ல
செயவரும் தானாம் சந்தி
ஆலயந் தன்னைச் சூழ்ந்த
அச்சரம் கயிறு தானே
வேலைநூல் வேத மாகும்
என்றுதான் முனிஎந் தன்நாள்
ஆனைமேல் உன்னைக் கண்டோர்
அருளிய வேத நூலை. 25

சீலை என்பது சிவபெருமான் செயல்தான். சக்தி ஆலையம் என்பது

எழுத்தாலான கயிறு. வேதை நூல் என்ற நூல் வேதமாகும் என்று முனிவர் கூறினார். அவர் அருளிய வேதநூலைக் கண்டோரை யானைமேல் வைத்து வாழ்த்துவார்கள்.



# அகத்தியர் மூலிகை மர்மம்

*சம்புடனே வேர் விரையை*
*உண்பவர்க்குக் கிராணி மூலம்*
*தெம்புடனே தீருமென்று கும்பமுனி*
*தானுரைத்தார்* 1

நாவல் வேர் கொட்டை ஆகியவற்றை பொடிசெய்து தக்கபடி அனுபானத்தில் உண்ண, கிராணி மூலம் நீங்கும்

*சித்திரபிலத்து மூலம்*
*மெத்தஆவலாய் உணர்த்திக் கத்தாகிலும் கியாழம்*
*வைத்தாகிலும் குடிக்கில் பித்தமொடு*
*சீதமும் பெருத்திதாகு மேல்வயிறும்*
*அத்திகர தாபமுடன்*
*இத்தனை நோயேகி விடும்.* 2

சித்திரமூலம் எனும் கொடிவேலியை உலர்த்திப் பொடிசெய்து குடிநீர் செய்து குடிக்க பித்தம், சீதக்கழிச்சல், பெருவயிறு எலும்பைப் பற்றிய சுரம், நீர்வேட்கை ஆகியவை தீரும்.

*நிலவாரை நுணுக்கில் மலை போலும்*
*ஊதும் வயிறு குலைவாய் குலைந்ததது*
*நிலையாது போகும் நிசம் தும்பியது தான் குடிக்கில்*
*அம்பிலிது கொடிய பம்பரம் போலவே சுழன்று*
*வெம் பித்தம் மெய்ப்பிக்கும்* 3

நிலவாரை பொடி பெருவயிற்றை நீக்கும் தும்பையைக் குடிநீரிலிட்டு அருந்த கொடிய பித்தம் நீங்கும்.

கரிசலாங்கண்ணி மாதர் பிரியாத வசியமுண்டு
தெரியாத கண்விளங்கும் தரியாது பாண்டிருமல்
ஆவாரைப் பிரமேகம் மாற்றுமே. 4

பெண்களுக்கு மிகவும் விருப்பமான, மூலிகை கையான்தகரை. இதனால் செய்யப்பட்ட மருந்துகள் கண்நோய்கள், வெளுப்பு நோய், இருமல் ஆகியவற்றை தீர்க்கும். ஆவாரை மகளிரின் கசிவு நோய்க்கு உகந்தது.

சங்குதனின் வேர்ப்பொடியைத்
திங்க அதில் மேகமெல்லாம்
இங்கிதமாய் ஏக முண்டு
மங்கை பாகர் தாமுரைத்தார் 5

சங்கங்குப்பி வேர்ப்பொடி மேகநோய்களை அகற்றும்

தழுதாழை வேர்ச் சமூலம்
வழுவாமலே கொணர்ந்து
விழுதோடவே உண்ணவே
பித்தமதில் வாதமெல்லாம்
மெத்தஅதி சூலைகளும்
உற்றுநில்லா தோடிவிடும். 6

தழுதாழை சமூலவிழுது பித்தம், வாதம் தொடர்பான சூலை நோய்களைப் போக்கும்.

வித்தகமாய் சூனிய முடக்கொத்தானுமே
சமூலமெடுத்து -----------
வித்தராய மாயரைத்து மெத்தவே ஆவலாய்
உண்ணவே கட்டுகள் மலமும் சீதம்
விட்டுவிடுமே ----------- பமிலக் கட்டுவலி
தான் தானும் ஓடும்
திட்டமதாய் செயலாகும். 7

முடக்கொற்றான் இலை முடக்கு வாதமான பிடிப்புகள் மலக்கட்டு, சீதக்கழிச்சல் ஆகியவற்றைத் தீர்க்கும்

முட்காவேளை தனை
சுக்காகவே உலர்த்தி
திங்காமலே குடித்து
விக்காமலே உண்ண அருந்தல்

பேதிகளும் சயமாகவே சுரங்கள்
தயவாகவே அடங்கும்
நயமாகும் காயசித்தியும்
ஆதண்டவலி அகற்றுமே. 8

முட்காவேளையைக் காயவைத்துப் பொடி பண்ணி உண்ண, குடிநீரிட்டு குடிக்க கழிச்சல், காசம், சுரங்கள் ஆகியன நீங்கும் காய கற்ப மூலிகைகளில் இது ஒன்றாகும். ஆதண்ட வலியைப் போக்கும்.

கொல்லங் கோவை சூழ்கிழங்கை
நல்லாவின் பாலில் உண்ண
எல்லா விடமும் மீளும் வில்லடை
இல்லாமலே ஓடும்
முத்தமெனும் மூலமதில்
மெத்த வயிறோமல் நிற்கும்
சத்தியொடு தாகமுடன்
கத்தி முன்னில்லாது சொன்னேன். 9

கொல்லங்கோவைக்கிழங்கைப் பாலிலிட்டு அவித்து உண்ண விடக்கடிகள் நீங்கும். மூலம் வயிற்றுக்கேடுகள் ஆகியவை முத்தக்காசால் தீரும். மேலும் வாந்தி, நீர்வேட்கை ஆகியனவும் தீரும்.

இம்பூரல் வேர் சமூலம்
தெம்பாகவே கொணர்ந்து
தம்பிரானையே நினைந்து
தெம்பாகவே உண்ணவே
குத்திருமல் கோழை சலம்
இரத்தமொடு சீ விழுதல்
அற்றுவிடும் மேகவாசம்
புத்தியுடன் உண்ணவே 10

இம்பூரல் சமூலத்தைப் பொடி செய்து தக்க அனுபானத்தில் உண்ண கோழை, சலம் இரத்தகாசம் மேகப்பிணிகள் நீங்கும்.

சிவனார் வேம்பு தனை
நவநாதர் பேரெழுதிச்
சிவமாகவே உண்ணவே
தவமாகும் காய சித்தி
பங்கியம் சேர் நீர் மூழ்கில்
சங்கு மித நூறு தனில்
மங்கை பிரியா வசியம்
எங்கு மிகவே வசியம். 11

சிவனார்வேம்பு காயகற்ப மூலிகையாதலால் உடல்வலிமையைத்தரும் சங்கங்குப்பி பொடி பெண்களுக்கு அழகுண்டாக்கும்

*சீராகும் செங்கழுநீர்*
*தோராத சீ வசியம்*
*மாறாத நாற் கரந்தை*
*பூராய வித்தை தரும்*
*ஆதளம் பால் தோட சுரம் அகற்றுமே*
*மேவனுகோ வலப்பை*
*கலக்கக் கல்லாணி வேரை.* 12

செங்கழுநீர் மூலிகை, பெண்களைக் கவரும். கரந்தை மூளைக்கு ஆற்றலைத்தரும்.

*மெல்லி நல்விரே கொணர்ந்து*
*நல்ல குருவை அரிசி*
*மெல்ல இடித்தே அடுப்பில்*
*புட்டாகவே அவித்து மட்டாகவே அருந்த*
*கெட்டேன் கெட்டேன் எனவே*
*விட்டோடுமே வலிப்பு* 13

ஆதனையின் பால் தோடசுரத்தைத் தீர்க்கும் கல்லாணி வேரை இடித்து, புட்டவியல் செய்து பிழிந்து சாற்றைக் குடித்தால் வலிப்பு நோய் தீரும்.

*பன்னாரும் பூவுலகில்*
*நன்னாரி வேருடனே*
*மின்னாரே யேஉணர்ந்து*
*தின்னவே அகல்நோய்*
*சோகை, காமாலை பித்தம்*
*தாகமோடான சர்த்தி*
*வேகமோடான வெப்புக் கூறுவேன்*
*ஓடிவிடும் கொடி வேலியான தொரு*
*கெடியான மூலிகையில்*
*துடியான அட்ட குன்மம்*
*பொடியாகுமே கிரந்தி.* 14

நன்னாரி வேரை இடித்துப் பொடிபண்ணி உட்கொள்ள சோகை, காமாலை, பித்தம், நீர்வேட்கை, வாந்தி ஆகியன நீங்கும்.

நிர்க்குண்டியின் நாமத்தை
முக்கியமுடனே உரைக்க
கக்கிசத் தலையின் நோயும்
திக்கனவே ஓடிவிடும். 15

நீர்க்குண்டி மூலிகை தலைநோயைப் போக்கும் காயகற்ப மூலிகையான தூதுவளை பித்தம், வாதம், ஈளை, வாந்தி ஆகியவற்றைப் போக்கும் ஆண்மையைப் பெருக்கும்.

தூதுவளையான கற்பம்
மேதை மொழியாளே பித்தம்
வாதமொடு ஈளை சர்த்தி
ஈத கலும் தாதுபுட்டி 16

நீர்முள்ளி சிறுநீர் நோய்களைப் போக்கும். அத்திப்பழம் கருப்பையில் ஏற்படும் நோய்களுக்கு நல்லது.

ஆடாவின் தோடைசயம் மாற்றமே
வெள்ளையெனும் சாரணையில்
கள்ளவிழி நோயகலும்
முள்ளியதில் தோய் வினையில்
வள்ளல் போல் தீரும் நிசம். 17

ஆடாதோடை இளைப்பு நோயைத்தீர்க்கும் வெள்ளைக் சாரணை வேர், விழிகளில் ஏற்படும் நோயைப் போக்கும்.

கூனாத்தி நற்கனியில்
மீளா கர்ப்ப நோய்கள்
தாளாம லோடுமென்று
காளாத்திரி நாதர் உரை.
குப்பை எனுமேனிதனில்
உப்பிசங்கள் போக்கிவிடும்
அப்பை எனும் கோவை சலம்
துப்புறவாய் தானிறுத்தும். 18

குப்பைமேனிக்கீரை வயிற்றுப் பொருமலைப் போக்கும் கோவையின் குடிநீர் கழிச்சலை அகற்றும்.

பூவரசுவேர் அனேகம்
மேவிவிடுமே கரப்பன்
கூவிளையில் மேலெரிவு
தீவினைகள் ஓடும்

தும்பை இரத்த மூலம் அருந்த
தும்பனைக்கு முந்துருக்காம்
தெம்புடனே யான்உரைசொல்
அன்பர் உரையாகும் இது 19

பூவரசு வேரால் செய்யப்பட்ட தைலங்களால் கரப்பான் நோய் தீரும். வில்வம் எரிச்சல், தீவினைகளையும் நீக்கும் தும்பை இரத்த மூலத்தை போக்கும்.

கற்பூர வள்ளியையும்
வற்பாக உண்பவர்க்கு
வெற்பாலை குத்தகலும்
இப்பாரில் பாண்டு வீக்கம்
வர்க்கணையும் பாமிளகு
தக்காளியில் போம் கணைகள்
அக்கரமும் ஈந்து நல்ல
பக்குவமதாகும் தாம். 20

கற்பூரவல்லி குத்தல் நோயைப்போக்கும் பாண்டு, சோபை, கணை என்பன மிளகு தக்காளியால் நீங்கும்

உற்றவினை சீந்தியாலே
பற்றிவிடும் அத்திசுரம்
வெற்றிவிடக் கிரந்தி
அத்திகுளிர் போக்குமெனச் சொல்
ஆடுதின்னாப்பாளை புழு அகற்றுமே. 21

அக்ரகாரம், உடல்வன்மையைத்தரும். சீந்தில் அத்திசுரம், விடகிரந்தி, எலும்பைப் பற்றிவரும் குளிர் சுரம் ஆகியவற்றைப் போக்கும் ஆடுதின்னாப்பாளை வயிற்றிலுள்ள, புழுவைக் கொல்லும்

வெட்சியெனும் மூலிகையில்
பச்சைநல்ல பால்கலந்து
கொச்சையுள்ள மாதருக்குக்
கச்சோத்தியமாய் உண்ணவே
விச்சுயெனு மூலிகையில்
பச்சைநல்ல பால்கறந்து
கொச்சையுள்ள மாதருக்குக்
கச்சக்கத ஆசையுண்டு 22

வெட்சியின் சாற்றினை பாலில் கலந்தருந்த சூதகநோய்கள் மகப்பேறு காரணமாக ஏற்படும் புண்கள் தீரும்.

*கோட்டான் கிரந்திதனை*
*மட்டுமிதமில்லை யென்று*
*சட்டமுனி. யார் உரைத்தார்*
*இட்டமது காணுமென்று* 23

கோட்டம் என்ற கடைச்சரக்கு கிரந்தியை நீக்கும்

*வல்லாரை உண்டுமிகச்*
*சொல்லாத நற்கணைகள்*
*இல்லாத மேகம் அறும்*
*சொல்லாத நோய் அகலும்* 24

வல்லாரைக்கீரையை உண்ண, கணைகள், மேகநோய்கள் தீரும்.

*நீலியுத்த வேரில் நவ*
*கோலியுத்த நஞ்சகலும்*
*வேலியுத்தமே பருத்தி*
*ஆலிமத்த வாதமறும்.* 25

எட்டியின் வேர், கொட்டையால் 18 வகையான தோற்பிணிகள் நிங்கும்.

*நிலவேம்பினால் சுரங்கள்*
*மலைவேம்பிலோடும் சளி*
*தலை வேம்பிலுண்டனேகம்*
*பிலவேம்பில் கட்டும் வயிறு*
*குன்றுமணியின் கொடியில்*
*உண்டு ----- டைனேகமே வினோதம்*
*சென்று மூலை மாதர்வந்து*
*கண்டுகொள்வார்கள் நிசமாய்*
*ஆட்டியொட்டி வெண் கடுப்பையாற்றுமே.* 26

அவுரி வேர் கடிவிடத்தை நீக்கும். வேலிப்பருத்தி என்ற உத்தாமணி வாதநோய்க்கு நல்லது. நிலவேம்பால் சுரங்களும், மலைவேம்பால் சளி இருமலும், வேம்பால் வயிற்றிலுள்ள கெடுதல்களும் தீரும்.

குன்றிமணியால் கண் கட்டி வித்தைகள் செய்யலாம். இதனை ஆட்டி எடுத்து உடலில் பூச வெண் குடுப்பு நோய் விலகும்.

*கொம்பரக்கிலே அனேகம்*
*வம்புகரம் போயகலும்*
*நடக்கியென நாலாயிரத்து நாலுநூற்றோடு*
*நாற்பத்து நாலு மூலிவகையைச் சொல்லிக்*
*கிடத்தினேன் கற்பத்துக்கு அடுத்த மூலி*
*கலங்கினா பூரா சொல்லக் கெட்டுக் கெட்டு* 27

கொம்பரக்கு பல் வகையான சுரஙகளை நீக்கும். 4444 மூலிகைகள் கணக்கிடப்பட்டுள்ளன. கற்ப மூலிகைகளுக்குப் பின் இவற்றைப் பற்றிக் கூறுவேன். தவறு ஏற்படாமல் மருத்துகள் செய்யும் முறைகளை விளக்கமாகக் கூறுகிறேன் முத்துகளை வடமாகக் கோத்தது போல நிகண்டு நூலில் எல்லாவகையான கருத்துகளையும் எடுத்துரைத்துள்ளேன்

*திறந்திட்டேன் சீந்திலுக்கு திரேக சித்தி*
*திறமான மருளுக்கு விரணம் போகும்*
*கறந்திட்டக் காஞ்சொறி சிலேத்துமத்தைப் போக்கும்*
*-----------------------------------------*
*துறந்திட்ட ஆடாதோடை சுரத்தைப் போக்கும்*
*சுயமான கருங்காலி குட்டம் போக்கும்*
*நறந்திட்ட வெண், கருங்காலி தானே*
*நாகமது கட்டியே மணிபோலாகுமே.* 28

சீந்தில் உடல் வன்மைக்கான காய கற்ப மூலிகை. மருள் இரணம் நீக்கும். காஞ்சொறியானது கபத்தை நீக்கும். ஆடாதோடை சுரத்தை நீக்கும் கருங்காலியானது தோல் நோய்களை நீக்கும்.

*மணிதான வேம்புதான் பித்தம் போக்கும்*
*மாபெரிய வேம்புக்கு வாதம் போக்கும்*
*நிணியான நிலவேம்பு கபத்தைப் போக்கும்*
*நீண்ட சர்க்கரை வேம்பு காய சித்தி*
*கொணியான முத்தமது தோடம் போக்கும்*
*குணமான பற்பாடகம் தோடம் போக்கும்*
*விணியான வெட்டிவேர், தாபம் போக்கும்*
*விலாமிச்சம் வேர், பித்த சுரங்கள் போமே.* 29

வெண்மையான கருங்காலி மரத்தால் நாகம் உருகி ஓடாமல் கட்டும்

மணிசெய்யப்பயன்படும். வேப்பங்கொட்டை பித்தநோய்களையும், வேப்பமரம் வாதநோய்களையும் போக்கும். நில வேம்பு கபத்தை போக்கும் சர்க்கரை வேம்பு, உடலை வன்மையாக்கும். முத்தக்காசு, பற்பாடகம் குற்றங்களை நீக்கும் வெட்டிவேரால் நீர்வேட்கை நோயும், விலாமிச்ச வேரால் பித்தசுரங்களும் நீங்கும்.

*பற்றிட்ட சுக்கதனால் சர்வரோகம் போகும்*
*பண்பாக மிளகுக்கு வாத நாசம்*
*ஏற்றிட்ட திப்பிலிதான் கபத்தைச் சாகும்*
*எளிதான மூலந்தான் சுரத்தைப் போக்கும்*
*தேற்றிட்ட செவ்வியந்தான் திமிருக்காதி*
*திப்பிலி மூலந்தனக்குச் சுரங்கள் போமே.* 30

சுக்கு, பல்வேறு நோய்களை நீக்கும். மிளகு வாத நோயைப் போக்கும். திப்பிலிமூலம் சுரத்தை நீக்கும். யானைத்திப்பிலியால் சன்னி என்ற முப்பிணி நோய்களும் நீங்கும்.

*போமேதான் கபந்தீரும் கொடிவே லிக்கு*
*பேரான சத்திரத்தின் கட்டி போகும்*
*ஆமேதான் ஆம அக்னி உண்டாகும்*
*அமையாகும் பிணிதனக்கு உப்புக் கட்டும்*
*கோமேதான் கொறுக்காயின் புளித னக்குக்*
*கூர்மையாம் வெடியுப்புக் கட்டி நிற்கும்*
*தேமேதான் சீரகந்தான் பித்தம் போக்கும்*
*சேர்ந்தகருஞ் சீரகந்தான் கிருமி போமே.* 31

செவ்வியம் திமிர்வாதம் போக்கும். திப்பிலிமூலம் சுரம் மற்றும் கபத்தைக் களையும். கொடிவேலி சாத்திர பேதியானது உருகிஓடாமல் கட்டும். வயிற்றில் செரிமானத்தை ஏற்படுத்தும். இதனால் உப்பையும் கட்டலாம். கொடுக்காப்புளியால் வெடியுப்பைக் கட்டலாம். கருஞ்சீரகம், வயிற்றிலுள்ள பூச்சிகளை நீக்கும் சீரகம் பித்தநோய்களை நீக்கும்.

*போமென்ற சதகுப்பை உதர வாதம்*
*போக்கும் கானகத்தில் சீர கந்தான்*
*சோமென்ற குட்டங்கள் கடிகள் போக்கும்*
*குணமான வெந்தயத்தால் கடுப்பு போகும்*
*தேமென்ற கொத்தமல்லி எரிவு போக்கும்*
*திறமான வசம்பும் அசீரணத்தைப் போக்கும்*

*காமென்ற கடுக்காய்தான் கற்ப மாகும்*
*கடிதான நெல்லிக்கு உட்டினம் போமே.* 32

சதகுப்பையால் வயிற்றுக் கோளாறுகள் நீங்கும் சீரகம் தோல் நோய்கள், விடக்கடிகளை நீக்கும் கொத்தமல்லி எரிச்சலையும், வெந்தயம் கடுப்புக் கழிச்சலையும் நீக்கும் வசம்பால் செரியாமை தீரும் கடுக்காய் காயகற்பமாகும். நெல்லிக்காய் வெப்பத்தைப் போக்கும்.

*நெல்லியொடு தான்றிக்குச் சுவாசம் போகும்*
*நேரான கடுகுக்குச் சூலை போகும்*
*வில்லியொடு வெண்கடுகு குட்டம் போகும்*
*மீறியதோர் மஞ்சளது மந்தம் போகும்*
*வல்லியதோர் சடாமாஞ்சில் சுவாசம் போகும்*
*மயங்கியதோர் அதிவிடையம் கிராணி போகும்*
*கல்லியதோர் கடுகு ரோகணி இன்னாலே*
*களிம்பற்று மலசுத்தி காணும் தானே.* 33

நெல்லி, தான்றி போன்றவை இரைப்பு நோய்க்கு நல்ல மருந்துகள் மஞ்சள் வயிற்றிலுள்ள மந்தத்தைப் போக்கும். சடாமஞ்சில் இரைப்பு நோயைத் தீர்க்கும். அதிவிடையம் கழிச்சல் நோயை நீக்கும். கடுகு ரோகணி மலக்கட்டைப் போக்கும்

*பாரென்ற மஞ்சட்டி இரத்தம் போக்கும்*
*பதமான சிறுதேக்கு இரத்தம் போக்கும்*
*காரென்ற கிச்சிலியின் கிழங்கு தன்னால்*
*கனமான தலைவலியைக் கடிசாய்ப் போக்கும்*
*கோரென்ற கற்கடக சிங்கி தானும்*
*கொடிதான சீதஇரத்த அதிசாரம் போக்கும்*
*யாரென்ற அதிமதுரம் தோடம் போக்கும்*
*மார்க்கமாய்க் கார்போக வன்மை கேளே.* 34

மஞ்சட்டி மற்றும் சிறுதேக்கு குருதிப் பெருக்கினைத் தீர்க்கும் கிச்சிலிக் கிழங்கு தலைவலிபோக்கும் கற்கடகசிங்கி, அதிசாரக் கழிச்சல் சீதக்கழிச்சல், இரத்தக்கழிச்சல் போன்றவற்றை தீர்க்கும். அதிமதுரம் குற்றங்களைப் போக்கும்

*கேளப்பா விடகுட்டம் நாச மாகும்*
*கொடிதான அரத்தைக்குச் சுவாசம் போகும்*
*வாளப்பா வாய்விளங்கம், புழுக்கள் மாயும்*
*வாலுளுவை அரிசிக்குக் குட்டம் தீரும்*

*கேளப்பா சிறியவா லுளுவை என்றால்*
*சிறப்பான தைலத்தில் கந்தி கட்டும்*
*நீளப்பா சயம்தீரும் பசியுண் டாகும்*
*நெடிதான சேங்கொட்டை கடிகள் போமே.* 35

காரிபோக அரிசி, கடிநஞ்சுகள் தோல் நோய்கள் ஆகியவற்றை அகற்றும் அரத்தையால் காற்றுப்பையில் ஏற்படும் தடைகள், இரைப்பு ஆகியவை விலகும். வாய்விளங்கம் குடலில் உள்ள பூச்சிகளை வெளியேதள்ளும். சிறிய வாலுளுவைத் தைலம் கந்தத்தைக் கட்டுகளாக்கி உருகி ஓடாமல் கட்டுப்படுத்தும். வாலுளுவை அரிசி, இளைப்பு நோயை போக்கி பசியை உண்டாகும், மற்றும் தோற்பிணிகளைத் தீர்க்கும். சேராங்கொட்டையால் செய்த மருந்துகள் விடக்கடிகளை போக்கும்.

*விடம்போக்கும் கருங்குட்டம் விரணம் போக்கும்*
*மெதுவான அத்தி சுரங்கள் போக்கும்*
*விடம்போக்கும் தாளிசபத்திரிக்கு*
*மெல்லிளைப்பு, சுவாசமொடு இருமல் போக்கும்*
*விடம்போக்கும் முந்திரிகைக் கனியைத் தின்றால்*
*விசேடமுடன் நீர்க்கடுப்பு வெக்கை தீரும்*
*விடம்போக்கும் இதிலுள்ள தினவு போகும்*
*மேலான கிராம்பினுட வன்மை கேளே.* 36

சேராங்கொட்டை சேர்க்கப்பட்ட மருந்துகள் கருங்குட்டம் இரணம் ஆகியவற்றுக்கு தரலாம். அத்தி சுரம் போக்கும் விடங்களை அகற்றும். தாளிசபத்திரி இரைப்பை அகற்றும். இருமல் போன்ற நோய்களை விலக்கும். முந்திரிக் கனி நீர்க்கடுப்பைத் தீர்க்கும். வெப்பத்தைத் தீர்க்கும் அரிப்பை விலக்கும்.

*மேன்மையாய்ச் சன்னியொடு சுரங்கள் கோழை*
*மிடுக்கான அதிசாரம் பித்தம் போக்கும்*
*வெண்மையாய்ச் சிறுநாகப் பூ தனக்கு*
*வெறுப்பான பித்தமொடு வாதம் தீரும்*
*தண்மையாம் சடாமாஞ்சில் மேகம் தீரும்*
*தன் கந்தமாம் மஞ்சளினால் நீரே கட்டும்*
*கொண்மையாம் கோட்டமது தாகம் தீரும்*
*பொடுமெழுகு தன்னாலே கிரணம் போமே.* 37

இலவங்கத்தால் சன்னி, சுரம், அதிசாரக் கழிச்சல், பித்தம் ஆகியன

விலகும் சிறுநாகப்பூ பித்தம் வாதம் ஆகிய நோய்களைத் தீர்க்கும் சுந்தகமானது சிறுநீரைச் சுருக்கும். கோட்டம் நீர்வேட்கையை அகற்றும் மெழுகு இரணத்தைத் தீர்க்கும்

*விரணம் போம், குங்கிலியம் குக்கிலுக்கு*
*மீறியதோர் சூலைக்குக் குந்திரிருக்கம்*
*தரணமாம் தலைவலி, பீனசம் போகும்*
*மித, வேதனமாய் கூகைநீர் பிரமேகம் போகும்*
*கரணமாம் கத்தூரி வசிய மாகும்*
*கடிதான அக்கி, மையின் வாதம் போகும்*
*குறணமாம் கோரோசனை யுள்விரணம் போகும்*
*குங்குமப்பூ சிரசில்நிற்கும் வாதம் போமே.* 38

குங்கிலியத்தால் இரணம் ஆறும் மற்றும் தலைவலி, பீனிசம், சூலை ஆகியவை குங்கிலியத்தால் ஆன மருந்துகளால் விலகும் கத்தூரி எனும் மான்மதம் வசியப்பொருள் (இதைப் பொட்டாக நெற்றியில் வைத்துக் கொள்வார்கள்), அக்கி, வாதம் ஆகியவற்றை அகற்றும். கோரோசனையால் உடலில் உள்ள இரணம் ஆறும். குங்குமப்பூ வாதத்தைத் தீர்க்கும்.

*போமேதான் கடைமருந்தின் குணங்க ளெல்லாம்*
*பிரித்துமே வெவ்வேறாய்ப் பேராய்ச் சொன்னோம்*
*ஆமென்ற கடைமருந்துப் பலன்கள் செய்ய*
*அதில்கொடுக்கும் அங்கு பற்பம் கேளு*
*பாமென்ற பரும்பாறை அஞ்சுக் குள்ளே*
*பருத்த மாவேப்பிலையும் பாதி போட்டுக்*
*காமென்ற நல்லதண்ணீர் கலந்துதான் வார்த்துத்*
*தவறாமல் அடுப்பேற்றி எரித்தி டாயே.* 39

கடைமருந்துகளின் செயல்களள் கூறப்பட்டுள்ளது மருந்துகள், பற்பமாக்கும் முறைகள்பற்றி கூறுகின்றேன்.

*எரித்துமே ஆறுசாமம் பொங்கா மல்தான்*
*நீர்இரட்டி ஒன்றாய், காய்ச்சிக் கொண்டு*
*அரித்துமே அஞ்சாமல் வடித்துக் கொண்டு*
*அடுப்பெரித்த சட்டிக்குள்ளே வைத்து*
*திருத்தமாய்ச் சூதமது பலந்தா னிரண்டு*
*சுத்திபண்ணிப் பெருஞ்சட்டிக் குள்ளே வைத்துத்*
*திருத்தமாய்ச் சூளைசெய்து தீபம் போலாம்*
*சயமாக நீர்வார்த்து எரித்தி டாயே.* 40

இந்துப்பு, கல்லுப்பு சோற்றுப்பு பூநீறு வளையல் உப்பு ஆகிய ஐந்து உப்புகள் மற்றும் வேப்பிலை ஆகியவற்றை சட்டியின் பாதியளவுக்கு போடவும். நீர் 8 பங்கு வார்த்து அடுப்பிலேற்றி 6 சாமம் பொங்கிவராமல் காய்ச்சி 1 பங்காக ஆனவுடன் இறக்கவும். இதனுடன் இரசம் 2 பலம் சேர்த்து சமஅளவு நீர்வார்க்கவும். பின் மேல் மூடி கொண்டு மூடி, தீபாக்கினியாக எரித்தெடுக்கவும்

*எரித்தெடுத்தால் சூதமதுவும் குருவு மாகும்*
*இதுவழித்து எடுத்தவுடனே கல்வத் திட்டு*
*எரித்திதொரு கசாயத்தை விட்டே யாட்டி*
*வில்லைபண்ணிப் பிராஞ்சாம்பல் உள்ளே வைத்துப்*
*பிரித்திடாயே புதுஅகலில் வைத்து மூடிப்*
*பலக்கவே மண்செய்து காய வைத்து*
*நரித்திடவே நாற்பத்தொரு புடத்தைப் போட*
*நன்றாகும் சூதமது நயந்து காணே.* 41

இவ்விதம் எடுக்கப்பட்ட குருமருந்தைக் கல்வத்தில் காய்ச்சின கசாயத்தால் அரைத்து எடுத்து வில்லை செய்து உலர்த்தி புது அகலில் பிராயஞ்சாம்பலையும் போட்டு, நடுவில் வில்லையைப் போட்டு மூடி, சிலை மண் கொண்டு ஒட்டவும். வராட்டிகளால் 41 தடவைகள் புடம் போட்டெடுக்க இரசம் மென்மையான பற்பமாகும்

*இஞ்சியை மெள்ள வாட்டி*
*ஏலமேல் புரணியையும் நீக்கிக்*
*கொஞ்சமாய் -------------- உப்பு*
*கற்கவே ஊற வைத்து*
*மிஞ்சிய மருந்த துக்கும்*
*மென்குடல் வலிக்கும் வாயு*
*நெஞ்சுறு புளித்தேப்பம்*
*நிதம்தின்னச் செரிக்கும் அன்னம்.* 42

இஞ்சியைச் சிறு தீயில் வாட்டி மேற்றோலை நீக்கி உப்பைச் சிறிது சேர்த்து பயன்படுத்தினால் மெல்லிய வயிற்று வலி வாயு, நெஞ்சைக்கரிக்கும் புளித்த ஏப்பம் ஆகியன தீரும். உணவு சீரணமாகும்.

*கச்சல் நாரத்தங் காயைக்*
*கத்தியால் வளைய மாக்கி*
*மிச்சமாய் உப்புத் தூளில்*
*மிளிர்மஞ்சள் வெந்த யத்தை*

*நச்சவே வறுத்து நன்றாய்த்*
*தூளை நறுந்திட்டு*
*வச்சமில் ஊறு காயாய்*
*அருந்தவே செரிக்கும் அன்னம்* 43

இளம் நாரத்தையை எடுத்து வட்டமாக நறுக்கி மஞ்சள், வெந்தயம் ஆகியவற்றைப் பொடிசெய்து கலக்கி ஊறுகாயாகப் பயன்படுத்தினால் உணவு சீரணமாகும்.

*உப்பில்லாப் பத்தியத்துக்*
*கொன்றுமாகத் தின்றாலும்*
*செப்பிடு முள்ளிக்காய், தேன்*
*செரியதாய் முருங்கைப் பிஞ்சு*
*திப்பிலி இஞ்சித் தூது (வளை)*
*திரிதோடந் தனைக் கொக்கும்.* 44

உப்பில்லா பத்தியத்திற்கான உணவு முள்ளிக்காய், தேன், முருங்கைப்பிஞ்சு, திப்பிலி, இஞ்சி, தூதுவளை ஆகியவையாகும்.

*ஒப்பரா ---------------------------- மந்தம் தீர*
*உப்பும் வெந்நீரும் கொள்ளே*
*பாலமாந்தம் வெல்லம் சுக்கு*
*பகரென்ன அசமதாகம்*
*சீலமில் தயிர் மந்தத்தால்.* 45

உப்பு, வெந்நீர், மந்தம், போக்கும் வெல்லம், சுக்கு, ஓமம் என்பன இலேசான மந்தத்தைத் தீர்க்கும். (இப்பாடல் சரிவர முடிக்கப்படவில்லை.)

*ஏலமும் சுக்கும் உப்பும்*
*இசையவே மோரில் போட்டு*
*மேலுயர் கரிய வேம்பின்*
*நிலை எலும்மிச்சைக் கூட்டி*
*காலமாம் கொட்டையுண்ணக்*
*கற்கண்டு வெந்நீரோடு*
*சாலிநெய் கூட்டி, உண்கில்*
*தாகம்போம், சாறு இன்பம்* 46

ஏலம், சுக்குப்பொடி மோரில் சேர்த்து கறிவேப்பிலை, எலுமிச்சஞ் சாறு ஆகியவற்றுடன் கலக்கிக் கொள்ளவும் ஊறிய பொடியைக் காலையில் வெந்நீர், கற்கண்டுத்தூள், நெய்யில் உண்டு வர நீர்வேட்கை தீரும். இதன் சாறு இனிப்புச் சுவை தரும்.

# அகத்தியர் நாடி

## காப்பு

*ஆதிதன் பிரிய மான அகமது அருளி னாலே*
*நீதியாம் நாடி நூலை நின்மய வடிவு கொண்டு*
*காதியா ------------------- கருத்தினால் துதித்தின்னம்*
*சோதியாம் அறிஞர் தங்கள் துணையடி சரணம் காப்பாம் 1*

நீதியாம் இந்நாடி நூலை, அகமது அருளினால் செய்துள்ளேன் இந்நூலைக் கூறத் துவங்குவதற்கு முன் ஒளிமிகும் அறிஞர்களின் துணையான திருப்பாதங்களைக் காக்கும்படி துதித்துக்கின்றேன்

## நூல்

*மூலத்தில் எழுத்தீராயிரம் நாடி*
*முளைத்தெழுந்து வலைபோல முடிந்தோட*
*கோலமாய்ப் பதிமூவாயிரம் நரம்புக்*
*கோர்வையாம் சூழ்ந்திருக்கும் கூட்டுக் குள்ளே*
*காலனாம் நாடிபத்து வாயு பத்து*
*கதிப்பிதெல்லாம் முற்கோவை பகைமி னாலே*
*நாலாயிரத்து நானூற்று நாற்பத் தெட்டு*
*நோயிஞ்சு பேர் பிறக்குமென்று நாட்ட லாமே. 2*

வலைபோலத் தோன்றும் 72000 நாடி நரம்புகள் உடலில் அடிப்படையாக உள்ளது இதில் 13000 நரம்புகள் தொடர்ச்சியாக சூழ்ந்து காணப்படும். இக்கூட்டுக்குள்ளிருக்கும் தச நாடிகள் கீழ்வருமாறு

1. ***இடகலை*** *- வலக்கால் பெருவிரல் - இடமூக்குவரை செயல்படும்*
2. ***பிங்கலை*** *- இடக்கால் பெருவிரல்-வலது மூக்குவரை செயல்படும்.*
3. ***சுழுமுனை*** *- மூலாதாரம் முதல் தலை வரை செயல்படும்*
4. ***சிகுவை*** *- தொண்டையில் இருந்து உணவு, நீர் என்பனவற்றை விழுங்கச் செய்யும்.*
5. ***புருடன்*** *- வலக்கண்ணில் செயல்படும்.*
6. ***காந்தார்*** *- இடக்கண்ணில் செயல்படும்*
7. ***அத்தி*** *- வலது காதில் செயல்படும்.*
8. ***அலம்புடை*** *- இடது காதில் செயல்படும்*
9. ***சங்கினி*** *- குறியில் செயல்படும்*

*10. குகு - அபானத்தில் செயல்படும்.*

அதேபோன்று தசவாயுக்கள் கீழ்வருமாறு

**உயிர்வளி (அபானன்) :** 360 சுவாசம் வீதம் நாள் ஒன்றுக்கு 21600 காற்று வெளிப்படும். இது பிராணாமயக் கோசத்தில் செயல்படும்.

**அபானன்(கரிவளி) :** மலம் விந்து, சிறுநீர், வியர்வை போன்ற கழிவுகளைத் தள்ளும்.

வியானன் : உறுப்புகளை நீட்டவும், மடக்கவும், இயக்கவும் செய்யும்

**உதானன் :** உணவின் சாரத்தை எல்லா உறுப்புகளுக்கும் கொண்டு ஊட்டும்.

**சமானன் :** மற்ற இயக்கங்களைக் கட்டுப்படுத்தி எல்லா உறுப்புகளுக்கும் போதிய சத்து கிடைக்கச் செய்யும்.

நாகன் : கண்களை விழித்தல், மயிர்களைச் சிலிர்த்தல் உணர்வுகளை எதிரொலிக்கும் நுண்கலைகள் கற்கச் செய்யும்.

**கூர்மன் :** இமைகளை மூடித்திறத்தல், கொட்டாவி, ஒளியைக் கண்களுக்குத் தருதல், விழிநீரை உண்டாக்கல் ஆகியன செய்யும்.

கிருகரன் : நாவின் சுவை, நீர்த்துவம் உண்டாக்கல், தும்மல், இருமல், போன்றவற்றை உண்டாக்கும்.

தேவதத்தன் : சோம்பல், உடலை முறித்துக்கொள்ளவும், சினம் கொள்ளல் போன்ற உணர்ச்சிகளைத் தூண்டும். குதம், குய்யம் போன்ற இடங்களிலிருந்து செயல்படும்.

**தனஞ்செயன் :** வீக்கம் உண்டாக்கும் மூன்றாம்நாள், தலை வெடித்தபின் நீங்கும்.

நாடி, வாயுக்களின் மாறுபட்டால் 4448 பிணிகள் உண்டாகின்றன.

*தாதா என்னுரைப்பதற்கே தகுமோ? இந்தச்*
*சாத்திரத்தைக் கடைவிற்கும் சண்டா ளர்க்கே*
*மாதா, பிதா, மனங்கோணாமல்*
*மா பெரியோர் உரைத்த வழி*
*வேதாந்த மூர்த்திகளை அறிந்து போற்றி*
*மேதைமிகு நீதிகளும் அறிந்து போற்றிக்*

*காதினடி உபதேசம் குருவோதக் கேட்டுக்*
*கைதீட்சை பெற்றவனே யோக சுத்தன். 3*

மருத்துவத்தை வணிகமாக்குபவர்கள் கீழ்மக்கள். அதை தவிர்த்து, தாய்தந்தை பெரியோரின் விருப்பப்படியே நடந்து கொள்ள வேண்டும். செவியில் குரு, மந்திரங்களான மறைபொருளை ஓதவும், அவரின் திருக்கரங்களால் திருநீற்றைப் பெற்று தீட்சை அடைந்தவனே "யோக சித்தன்" எனப்படுவான்.

*சுத்தனடி - பலநூலைப் படித்துக் கொண்டு*
*சுழன்றுசுழன்று பண்டிதனே அவிழ்தம் செய்து*
*மெத்தக் கொலைபாவம் கொண்டா னாகில்*
*முகியாத எரிநரகில் விழுந்திடவும்*
*பக்தியுடன் குருபதத்தை வணங்கிப் போற்றிப்*
*பலஉயிரும் ஓர் உயிராய்ப் பாலித் தேதான்*
*அத்தனடி கண்டுபணிந் திருக்கத் தானே*
*கண்டிதமாய்ப் பண்டிதத்தைக் கருதிப் பாரே. 4*

பல்வேறு மருத்துவ நூற்களை ஆராய்ந்து புலமை பெற்று மருந்துகளைச் செய்யும் வலிமையடைதல் மருத்துவனின் இலக்கணமாகும். அவ்வாறு இல்லாதவன், செய்யும் மருத்துவம் கொலை செய்வதற்கு ஒப்பானதாகும். எனவே அவன் நரகத்திற்குச் செல்லவேண்டி வரும். ஒரு குருவின் திருவடிகளை யடைந்து அனைத்து உயிர்களையும் ஒன்றாக எண்ணி, இறைவனை வணங்கி, மருத்துவம் செய்தலே சிறந்தது.

*பாரப்பா நோயினுட பூராய நேர்மை*
*பகைத்து வந்த நாள்பிணியைப் பகிர்ந்த றிந்து*
*தீரப்பா அவனிடத்தில் குறையுண் டானால்*
*திருவுள்ளத்தை நோக்கித் தருமம் செய்யவுரைத்துச்*
*சேரப்பா, பகைவரையும் சிநேகித மாக்கித்*
*தெளிவாக இருமனதும் ஒருமன தாக*
*நேரப்பா அவிழ்தங்கள் அவன்கை யாலே*
*நிச்சயமாய்ச் சித்திக்கும் இதுவே நீதி. 5*

நோய்க்கான காரணங்கள், தோன்றியவிதம், கடைபிடிக்க வேண்டிய பத்திய முறைகள், நோயாளிகளின் குறைகளை நீக்கக் கூறுதல், அறச்செயல்களைச் செய்யச் சொல்லல், பகைவர்களை நண்பர்களாகக் கருதல் ஆகியன மருத்துவனின் இலக்கணமாகும். அவனுடைய மருந்துகள் அனைத்துமே சிறப்பானபடி அமைந்து நோய்களைக்களையும்.

*நீதியாய் அவிழ்தங்கள் சேர்க்கும் பொழுது*
*நிச்சயமாய்ச் சரக்குகளைச் சுத்தி செய்து*
*ஆதி மங்கள வார முகூர்த்தம் கோலி*
*அளவுடனே அவிழ்தங்கள் அரைத்த பின்பு*
*ஓதியே தெய்வ சகாய என்றஞ்சி*
*உயிரெழுத்தை உருவேற்றி உண்டை செய்து*
*பாதியாய் அவிழ்தங்கள் இறுகும் போது*
*பரிகார நடக்கைக் குறுதி கேளே.* 6

மருத்துவநூல்களில் கூறப்பட்டபடி சரக்குகளைத்தகுந்தவாறு சுத்தி செய்து சரியான வேளையில் மருந்துகளை அரைத்து, செய்யத் தொடங்கவும். இறைவனை வேண்டி, வணங்கியும் மந்திரங்களை ஓதவும். மருந்துகளை உருட்டும்பொழுதும் உலர்த்திக் கெட்டியாக்கும் போதும் நோயாளிகளின் நோய்கள் நீங்கும் வண்ணம், இறைவனை எண்ண வேண்டும்.

## மருத்துவர் இலக்கணம்

*கேளப்பா, வைத்தியருக்கு ஞானம் வேண்டும்*
*கேட்கும்முன்னே சொல்ல, மெத்தக் கல்வி வேண்டும்*
*ஆளப்பா, நோக்கிமெத்த வணக்க முள்ள*
*நற்குணமாய் நெஞ்சுள்ள மனது வேண்டும்*
*சோளப்பா அவதான சுத்த மாக*
*தீர்க்கமுள்ள தந்திரமும் புத்தியும் வேண்டும்*
*நாளப்பா, இதன்படியே நடந்தா னாகில்*
*நாட்டோர்க்கு நாத்திகன்என் றுரைத்தார், வாதி* 7

மருத்துவர்கள் நோயைப்பற்றிய நூல்களைப்படித்து அறிவு ஏற்பட்ட பின் அடக்கமும், பணிவான குணமும் படைத்தவர்களாக இருக்க வேண்டும். மருத்துவத்தை மேன்மையுடன் செய்யத் தந்திரம் மந்திரம் போன்றவற்றை கற்றறிதல் வேண்டும்

*வாதிமகன் வைத்தியந்தான், குணத்தைச் சொல்வேன்*
*வகையாகக் கைபார்த்து, முகத்தைப் பார்த்துச்*
*சோதியுடன் மலசலத்தின் பரிட்சை பார்த்துச்*
*சொல்லிடுவான் வியாதிதனை அறிந்து நன்றாய்*

*சேதிகள்தான் ஒருவருக்குத் தெம்பு சொல்லித்*
*தேகமதைத் தொட்டுமெத்தப் பார்த்துக் கொள்வான்*
*நீதியுடன் கடவுளைத்தான் பணிந்து கொண்டு*
*திண்ணமாய் அவிழ்தவகை, இடுவாள் கண்டீர். 8*

நல்ல மருத்துவன் நோயாளியின் நாடியையும் முகத்தையும் பார்க்க வேண்டும், மலம், சிறுநீர் பற்றிய ஆய்வுகளை அறிவுடன் செய்தல் வேண்டும். இத்தேர்வுகளுக்குப் பின்னர் நோயைக் கணித்து அறிந்து நோயாளிகளுக்குத் நல்ல உறுதி மொழியையும் ஆறுதல் வார்த்தைகளையும் கூறுவேண்டும். உடல் முழுவதையும் நன்கு தொட்டறிந்து ஆய்வு செய்து கடவுளைப்பணிந்து மருந்தைத் தேர்வுசெய்து தரவேண்டும்.

## நாடி பார்த்தல்

*கண்டாயே ஆடவர்க்கு வலக்கரமு மாகும்*
*கருவுடனே பொண்பிள்ளைக்கு இடக்கரம் என்றேன்*
*வெண்டான இடக்கையை, வலக்கை யாலே*
*மேலான வலக்கையாலே*
*நண்டாகக் கைதேய்த்து நெட்டி வாங்கி*
*நாட்டுமூ விரலுக்கு விரலண் டாமை*
*அண்டாமல் நெட்டைவிட்டுப் பாரு*
*அசைவாகும் வாதபித்த சிலேத்தும மாமே. 9*

ஆண்களுக்கு வலது கையிலும் பெண்களுக்கு இடக்கையிலும் நாடிபார்க்க வேண்டும் இடக்கையை தனது வலதுகையால் பிடித்து, நெட்டை வாங்கி, மூன்று விரல்களால் நெல்லெடை விட்டு விட்டு அழுத்திப் பார்க்க வாத பித்தம், கபநாடிகளின் நடையானது புலப்படும்.

## நாடி நடை

*ஆமென்ற புலனுடைய நாடி வாதந்தானே*
*அப்பனே கோழியுடைய நடைபோ லாகும்*
*வேமென்ற உயிருடைய பித்தந் தானே*
*இரைமேயும் காக்கையுட நடைபோ லாகும்*
*ஓமென்ற சதமுடைய ஐயந் தானே*
*ஒட்டமில்லாமல் மந்தியுட நடைபோ லாகும் 10*

வாத நாடி கோழிநடைபோன்றும் பித்த நாடி காக்கையின் நடைபோன்றும் ஐயநாடினது குரங்கின் நடைபோன்றும் இருக்கும்

காணப்பா, வாதமுன்னும், பித்தம் பின்னும்
கடையாக ஐயமது தோன்ற வேண்டும்
பேணப்பா, பிணியோர்இப் படியே கண்டால்
பிணிதீர்ந்து போச்சுஎன்று புகழ்ச்சி கூறு
ஊனப்பா, மூவருமே வரிசை தப்பி
ஊனில்லாப் பறவையைப்போல் உயர்ந்து நின்றால்
தானப்பா, இப்படியே கண்டோர்க் கெல்லாம்
சத்தியமாய் சீவிக்கும் அப்பா உண்மை. 11

வாதநாடி முதலிலும் பித்தநாடி நடுவிலும் கபநாடி கடைசியிலும் தோன்றும். இவ்வாறு நோயாளிக்குக் நாடி காணப்பட்டால் பிணி நீங்கியதாக தெரிவிக்கவும். மாறுபட்டுக் காணப்பட்டால். பிணி இருக்கின்றது என்பதை அறியவும்.

உண்மையுள்ள மூவருமே ஒடுக்கமாகி
ஒப்பில்லா வாதமது உலாவி நின்றால்
திண்மைவினை அகற்றவே சியலுண் டாகிச்
செமித்து வயிற்றிலே பித்தம் நின்று
நன்மையாய்க் கனல்மூட்டி தெளிவு தந்து
நயமாக சிவமயதாக்கி விக்கும்
ஆண்மனது கலங்காமல் துணிவு கொண்டு
அருளான அவிழ்தங்கள் அறிந்து மூட்டே. 12

மூன்று நாடிகளும் ஒன்றுபட்டு வாதநாடி இயங்கினால், அதனை முதலில் நீக்கவேண்டும். வயிற்றில் உண்டாகும் பித்தத்தை நல்அறிவுடன் நோயாளிக்குத் நன்கு விளக்கி நோயாளி, மனங்கலங்காமல் துணிவுடன் இருக்க அவிழ்தங்களான மருந்துகளை தேர்வு செய்து அளிக்கவும்.

மூட்டியே மூவருமே மூட மானால்
மூதண்ட சன்னியும் மூர்க்க மாகும்
மூட்டியே மூவருமே முறுகி நின்றால்
முத்தோடம் செனிக்கின்ற முறைமை யாகும்
கொட்டியே வாதமது குளிர்ந்து நின்றால்
குணமில்லை மரணத்தின் கூற தாகும்
வாட்டமாய் வாதமது மழுங்கி, நின்றால்
மரிக்கப்படா மரணமென்று மதிக்க வாமே. 13

மூன்று நாடிகளும் கூறிவர இயங்காமலிருந்தால் கடுமையான முக்குற்றப் பிணியான சன்னி நோய் என அறிக. வாதநாடி குளிர்ச்சியுடன்

இருந்தாலோ மெலிந்து பொலிவிழந்து இருந்தாளே நோயாளிபிழைப்பது அரிது.

*மதிக்கலாம் மூவரும் முன்னிட்டுதைத்தால்*
*வாதநோய் தீர்ந்து போகும் மரணமில்லை*
*பதிக்கலா, மூவரும் பின்னிட்டுதைத்தால்*
*பழியாது பிணிமீறும், பகைத்துக் கொல்லும்*
*குதிக்கலாம் வாதமது குதித்து நீண்டால்*
*கொடுமைசெய்யும் சுரங்களுட கூற தாகும்*
*விதிக்கலாம் வாதமது மெலிந்து நீண்டால்*
*வேகமாய், நீண்டசுரம் விட்டுப் போச்சே.* 14

மூவகை நாடிகளும் ஒன்றானால் வாதநோய் விலகும். மரண பயமில்லை. கபநாடியானது மிகுந்து ஏனைய நாடிகள் குறைய நோயாளி பிழைப்பது அரிது. வாதநாடியானது துடிப்புடன் நீண்டு இருக்க, கடுமையான சுரநோய் இருப்பதை அறியலாம். வாத நாடியானது மெலிதாகவும் நாடித்துடிப்பு நீண்டும் காணப்பட்டால் நீண்ட நாட்களுக்குப் பின்னர் சுரம் நீங்கும்

*போச்சுதப்பா, நல்லோர்க்கு வந்த நோய்கள்,*
*பொல்லாத பாவிகளுக்குப் போகா தப்பா*
*ஏச்சுதப்பா பகைத்துவந்த நோய்கு ணங்கள்*
*இதமறியா, வைத்தியரின் எழுமை கண்டு*
*வாச்சுதப்பா, இந்நூல்தான் வைத்தியருக்கு*
*வகைதொகையாய் வாதிகளை செயிக்கத் தானே*
*ஆச்சுதப்பா, முன்சொன்ன, இருநூற் றஞ்சும்*
*ஆமிந்த இந்நூலுக்கு ஆதி மூலம்.* 15

நல்லோர்க்கு ஏற்பட்ட பிணிகள் விலகும். ஆனால் பாவிகளுக்கு நோய்கள் தீராது. நோய்கள், பணத்தைக் குறிக்கோளாகக் கொண்டு செயல்படும் மருத்துவனையும் ஏமாறச்செய்யும்.

*மூலமே எழுபத்தீராயிரம் நாடி*
*முளைத்தெழுந்து சுழிதடத்தை மொழியோண் ணாது*
*காலனாய் இடருகின்ற நோவுக் கெல்லாம்*
*கருவுடனே சுழிமிகுந்த கையிற் குள்ளே,*
*காலமே வாதமது சுழிக்க வேணும்*
*கடுமதியம் பித்தமது கதிக்க வேணும்*

*மாலையிலே, ஐயமது உதிக்க வேணும்*
*வளமான நாடியென்று மதிக்க லாமே.* 16

இவ்விடம் 72000 நாடி நரம்புகளால் ஆனதாகும் இப்படிப்பட்ட நரம்புகளின் வளைந்த வழியை அடிப்படையாக அறிந்து கொண்டு நோயை கணிக்கவேண்டும். நாடியைக் கொண்டு இதை அறியலாம். காலையில் வாத நாடியும் பகலில் பித்த நாடியும் மாலையில் கபநாடியும் பெருகி இருக்கும். இதுவே நல்லுடலின் இலக்கணம் ஆகும்.

*காலமே வாதமது மெலிந்து நீண்டால்*
*கதிர்சாயும் பொழுதினிலே, மரண மாகும்*
*பாலமே நடுப்பித்தம் மெலிந்து நீண்டால்*
*பகர்கதிரோன், உதயமதில் மரண மாகும்*
*மாலையிலே ஐயமது, மெலிந்து நின்றால்*
*மரணமில்லை, வந்தநோய் தீர்ந்து போகும்*
*கூலமாய்ப் பகிர்ந்துநன்றாய், குறிப்ப றிந்து*
*கூறுவார்கள் பெரியோராமே.* 17

வாதநாடியானது காலையில் மெலிதாகவும் நீண்ட காலமும் இருந்தால் அந்தி சாயும் முன்னர் மரணம் உண்டாகும். பித்த நாடியானது மெலிந்து நீண்டு நடந்தால் அடுத்த காலைக்குள் மரணம் ஏற்படும். மாலையில் ஐய நாடியானது மெலிந்து காணப்பட்டால் அவ்விதம் மரணம் ஏற்படாது .

*ஆமேகேள், அடி துடி தான் அசைந்த சைந்து*
*அசைவாய் துடிதான் புதைந்துதைந்தால்*
*பூமாகேள், அவிழ்தமிட, வியாதி போச்சு*
*புண்டாகப் புனைகின்ற நாடி யாகும்*
*ஓமாகேள், அடி துடிதான் குறைந்தைந்து*
*ஓரமாகக் கடைதுடிதான் சுரந்து தைத்தால்*
*வீமாகேள், மணி, மந்திர அவிழ்தத் தாலும்*
*மீளாது விதிமுடிந்த நாடி யாமே.* 18

நாடியின் அளவு வேகமாகி பின்னர் மறைந்து மீண்டும் தோன்றினால் குணம் ஏற்படும். நாடியின் அளவு வேகம் குறைந்து இறுதியாக வேகமாக நிறைந்து பொருந்தினால். மணிமந்திர மருந்துகளால் குணம்ஏற்படாது.

*ஆகமாம் நாடி முற்றும் பாகமொத்து வீழ்ந்தால்*
*அவிழ்தமிடப் பிழைப்பார்கள்; அதிட்ட முண்டு*

*சோகமாய் நாடி முற்றும், பாதத்து வீழ்ந்தால்*
*தொலையாத மரணமென்று சொல்ல வேணும்*
*ஏகமாய் நாடி விழுந்து வரிலொருவர்*
*எழுந்தாலும் விழுந்தாலும் மரண மில்லை*
*வேகமாய் நாடி முற்றும், விழுந்த பின்ஐயம்*
*விழுந்தாலும், நின்றாலும் பிழைப்ப தில்லை.* 19

நாடியானது உடல் முழுவதும் பக்கமாக விழுந்தால் மருந்துகள் தர உடல் குணமடையும். நாடியானது வருத்தமுடன் முழுமையாக விழுந்தால் மரணம் தவிர்க்கமுடியாது.

*எல்லையாம் பித்தமுன்னும், வாதம் பின்னும்*
*எழும்பினால் அசாத்திய நாடி யாகும்*
*எல்லையாய் வாதமுன்னும், பித்தம் பின்னும்*
*எழும்பிடவே சாத்தியத்தின் நாடி யாகும்*
*மல்லையாய் வாதமது அமர்ந்து நின்றால்*
*வயிற்றிலே சோறிருந்து மந்த மாகும்*
*கல்லையாய் வாதமது கதித்து நின்றால்*
*களைப்புண்டாம் தீபனத்தின் நாடி யாமே.* 20

பித்தநாடி முன்னாலும் வாதநாடி பின்னாலும் துடித்தால் நோயானது அரிதில் தீரும். வாதநாடி முன்னாலும் அடுத்து பித்தநாடியானது பின்னாலும் துடிக்க நோயானது தீரும். வலிமையுடன் வாதநாடி வீற்றிருந்தால் சோறு செரியாமல் மந்தஉண்டாகும். வாதம் குமிழ்போல கிளம்பினால் உடல் களைப்புற்று பசி காணப்படும். குமிழ் ஏற்பட்டு மந்தம் உணர்ச்சி காணப்படும்.

*ஆகமாம், சரீரத்தின் கூரை கண்டு*
*அவனிதனில் மானிடர்க் கறையக் கேளு*
*மாகமாம், வாதத்தின் சரீரக் காரன்*
*வாளிப்பாய், தேகமுள்ள வடிவானவன்*
*யோகமாம், பித்தத்தின் சரீரக் காரன்*
*உறுதியாய் தேகமுள்ள குணதலாவன்*
*பாகமாம், சிலேத்துமத்தின், சரீரக் காரன்*
*பருவமாய்த் தேகமுள்ள திடியனவன்.* 21

இதயமே உடலின் வீடு. வாத உடலைக் கொண்டவன் அழகான உடலை உடையவன். பித்த உடலை உடையவன் உறுதியான

உறுப்புகளைக் கொண்டவன். பக்குவமான ஐயஉடலைக் கொண்டவன், உறுதியானவன்

*நாவனாம் சரீரத்தின் சரீரக் காரன்*
*நாதமாம் குரல்நீண்டு, பேச்சு வண்ணம்*
*பாவனாம் பித்தத்தின் சரீரக் காரன்*
*பதறியே, குரல் விண்டு, துடியாம் பேச்சு*
*கோவனாம் சிலேத்துமத்தின் சரீரக் காரன்*
*குமறியே குரல்விண்டு இடியாம் பேச்சு*
*மூவனாம் சமமித்த சத்தமில் லாமல்*
*மொழிந்தமற்ற சத்திமெல்லாம் பத்த மாமே.* 22

அழகிய சரீரம் கொண்டவனுக்கு குரல் ஓங்கி ஒலித்தும், நீண்டும் காணப்படும். இது வாத உடலின் இலக்கணமாகும். வலிமையான உடலைக் கொண்டவன் வேகமாகப் பேசுவான். இது பித்த உடலின் இலக்கணமாகும். கப உடலின் இலக்கணம் குரல் ஒலி வேகமாகவும் இடியோசை போன்று வலிமையுடனும் காணப்படும்.

## சுர இலக்கணம்

*ஆமப்பா, வாத சுரமலந்த*
*அங்கமெல்லாம், நொந்துபுண்ணாய்க் குளிருண் டாகும்*
*பூமப்பா, பித்தசுரம் சிவந்த*
*பித்துண்டால் தேகமுற்றும் எரிப்புண்டாகும்*
*காமப்பா, ஐயசுரம் உமித்தும் பித்து*
*கணுஎலும்பைக் குடைந்து கபநீர் உன் டாகும்*
*ஓமப்பா, இவைமூன்று ----------- வேறில்லை*
*ஒருசுரம் வாயுவினால் உதித்த வாறே.* 23

வாத சுரம் வந்தால் உடல் நொந்து புண்ணாக வலிக்கும். குளிர் நடுக்கம் உண்டாகும். பித்த சுரத்தில் மனம் மயக்கடையும் சிவப்பாக உடலில் எரிச்சல் ஏற்படும் பித்தத்தை ஐயசுரம் அழித்து கணு எலம்பைக் குடைந்து கபநீரை ஏற்படுத்தும். இவைகள் மூன்றும் வேறில்லையாம் வாதசுரம் ஏற்பட வாயு காரணமாகும்.

*வாறாக ஊறிக்கொட் டாவி, கொண்டால்*
*வாதத்தால் வந்தசுரம், வலுத்த தாகும்*
*பேறாக வா ------------------ கண்டால்*
*பித்தத்தால் வந்தசுரம், பலத்த தாகும்*

கூறப்பா சளி இருமல் சிறுக்குண் டானால்
குடைச்சலாய் வந்தசுரம் கோர்வை யாகும்
மூரப்பா, இவை வாயுவால் முச்சுரங் களாகும்
மூர்க்கத்தையடக்க, அடக்கவல்லார் முறைகூறு. 24

வாத சுரத்தில் கொட்டாவியானது வந்தால் அது வலிமையான நோயாகும். வாய்ப்பாகப் பித்த சுரத்தில் .......... வந்தால், அது வலிமையானதாகும். சளி, இருமல் குடைச்சல் முதலிய குறி குணங்கள் வர, சுரம் தொடர்ந்து வரும். இவை வாயுவால் வருவதாகும் இவற்றின் வன்மையை அழித்து நோயைத் தீர்க்கும் மருத்துவத்தைக் கூறுகின்றேன்.

கூறுமே உரப்பான கலிக்கம் போட்டால்
குலைந்துநின்ற சுரம்பாதி ஒடுங்கிப் போச்சு
பாருமே வழலைச்சக்தி வாங்கிப் போட்டால்
படர்ந்துநின்ற சுரமாதி ஒடுங்கிப் போச்சு
காருமே ஆக்கிராணப் பொடியைப் போட்டால்
கடந்துநின்ற சுரம்பாதி ஒடுங்கிப் போச்சு
தீருமே, கருமசுத்தி மூன்றும் செய்தால்
சடத்திலுள்ள நோயையெல்லாம் திருப்பு வோமே. 25

வெற்றியைத் தரும் கண்மையை இட சுரம் பாதியளவு குறையும் வழலை என்ற மருந்தைப் பயன்படுத்த சுரம் நீங்கும் நசியமாகப் பொடியைப் போட சுரம் பாதியளவு நீங்கும் செய்யும் மருத்துவச் செயலை மனம், மொழி மெய் என்ற மூன்று வகையிலும் நேர்மையாகச் செய்ய, உடலில் உள்ள வலியானது நீங்கும்.

ஓமென்ற மலக்கட்டைக் கழிக்க வைத்தால்
உடலிலுள்ள வாதையெல்லாம் ஓடிப் போச்சு
தாமென்ற சிறுநீரைத் தெளிய வைத்தால்
சடத்திலுள்ள வேகமெல்லாம் தணிந்து போச்சு
------------- உமிழ்நீரை முறிய வைத்தால்
கூட்டிலுள்ள பகையெல்லாம் குலைந்து போச்சு
கோமென் றிவைமூன்றும் களங்க மற்றால்
கொல்லவந்த காலனையும், வெல்ல லாமே. 26

மலக்கட்டு அகல, உடலில் உள்ள வேதனை யாவும் தீரும். சிறுநீரைத் தெளிய வைத்தால் உடலில் உள்ள வேகம் தணியும் உமிழ்நீரை முறியவைத்தால் உடலில் உள்ள பகை யாவும் தீரும் இம்மூன்றும் நன்னிலையடைய, பிறவியை வெல்லலாம்.



## அகஸ்தியர் மூலிகை மர்மம்

(வேறொரு மூலத்திலிருந்து அளிக்கப்படுகிறது)

சம்புடனேவேர் விரையை உண்டவர்தன் கிராணிமூலம்
தெம்புடனே திருமென்று கும்பமுனிதானுரைத்தார்
சித்திரபுரத்துமூலம் மெத்த ஆவலாய்க்கொணர்ந்து
சத்தாகிலும்கியாழம் வைத்தாகிலும்குடிக்கில்
பித்தமொடுமத்தமும் பொருத்ததொருமேல்வயிறும்
அத்திசாரதாகமுடன் இத்தனைநோய்யேகிவிடும்
நிலவாகைவேருரைக்கில் மலைபோலஊதுவயி
றலையாகுலையுமது நிலையாதுயேகும்நிஜம்
தும்பையதுதான்குடிக்கில் அம்பலத்துவேர்-கொடி
பம்பரம்போலே குழைத்துத் தின்பவர்வயிற்றுளைபோம்
கரிசலாங்கண்ணிமதம் பிரியாவசியமது
தரியா மிளகோடுண்ணத் தரியாதுபாண்டிருமல்
அவர்பிரமேகமேயகற்றுமே. 1.

சங்குநிலைவேர்பொடியை உலகுத்தில்மேகமெல்லாம்
இங்கிதமாயேகுமென்று மங்கைபாதர்தானுரைத்தார்
தழுதாழைவேர்சமூலம் வழுவாமலேகொணர்ந்து
தழுவாமலேயரைத்து விழுதோடவேயுணர்வை
சித்தமதில்வாதமெல்லாம் மெத்தவதில்சூலைகளும்
சத்திலாதோடுமிதே மற்றவிஷச்சூனியமும்
கொத்தானும்வேர்சமூலம் மெத்தாகவேயெடுத்து
விஸ்தாரமாயரைத்துமெத்த ஆளவாயுணர்வை
கட்டுகள்மலத்துசீதம் விட்டுவிடுமேயிடுப்பில்
சூட்டுவலித்தானுமது திட்டமுடன்செய்பகலும்
முக்கானனாயில்வேளை சுக்காகவேயுலர்த்தி
திக்காமலேவிடித்து விக்காமலேயருந்த
வயிறூதும்பேதிகளும் சுபரூபமாஞ்சுரமும்
தயவாகவேயடங்கும் நயமாகும்காயசித்தி
ஆதண்டத்தலைவலி யகற்றுமே. 2

கொல்லன்கோவைக்கிழங்கை நல்லஆவின்பாலிலுண்ண
மெள்ளவேவிஷங்களது வில்லடைவில்லாமலோடும்
மூத்தமெனும்மூலமதில் மெத்தவயிற்சேடனிற்குஞ்
சத்தமொடுதாகமுடன் நிற்குமுனில்லாதுசொன்னேன்

இன்பூரல்வேர்சமூலம் தென்பாகவேகொணர்ந்து
தம்பிரானையேநினைந்து தென்பாகவேயுணர்ந்து
குத்திருமல்கோழைசலம் நாற்றமொடுசீழகலும்
ஆத்திவிடுமேசுவாசம் பார்த்துபதமாயுணர்வை
சிவனார்தன்வேம்புதன்னை நவநாதர்பேர்வழுத்தி
உவமாகவேயுணர்வைத் தவமாகுங்காயசித்தி
பங்கயஞ்செய் நீளுலகில் சங்கமுற்ற மூலிகைநூல்
மங்கைபாகர்சொன்னபடி சிங்காரமாயானுரைத்த
வாடாதோடை தோஷமகற்றுமே. 3

கொல்லன்பகையாளிவேரை மெல்லக்கிள்ளியேகொணர்ந்து
நல்லக்குருவையரிசி வெள்ளவிடித்தேயடுப்பில்
பிட்டாகவேயவித்து மட்டாகவேயருந்த
கெட்டோம்கெட்டோமென்று விட்டோடும்மேல்வலிப்பு
பண்ணாறும்பூவுலகில் நன்னாரிவேர்தனை
மின்னாரவேகொணர்ந்து தின்னாரவேயகல்நோய்
சோகைக்காமாலைபித்தம் தாகமுடனேயகற்றி
வேகமானவெப்புதோஷம் போகபிரமியந்தீரும்
கூளாத்திநெற்கள்ளியிலை மீளாதகெர்ப்பவலி
தாளாமலோடுமென்று காளத்திநாதருரை
குப்பையெனுமேனிதன்னுள் உப்பிசங்கள் போக்கிவிடும்
அப்பையதில்கோழைசலம் துப்புறவாய்த்தானிருத்தும்
செட்டியமகத்துவத்தைப்பாருமே. 4

பூவரசில்வேரநேகம் ஏகிவேடுமேகரப்பான்
கூவிளையில்வெப்பொரிப்பு தீவினைகளோடிவிடும்
கொடிவேலியானதொரு கொடியானமூலிகையில்
துடியானஅஷ்டகுன்மம் பொடியாகுமேகிரந்தி
நெக்குன்றிநாமமதை முக்கியமுடனுரைக்க
எக்கிஷத்தலையின்நோவு மக்கணத்திலோடிவிடும்
தூதுவேளையானகர்ப்பம் வேதமொழியாளேநித்தம்
வாதமொடுஈளைசத்தி தாகமொடுதாதுபுஷ்டி
சம்பிரமுடனேகவும் தும்பையெனுமூலியது
வம்புபடுரத்தமூலம் தம்பனமாகுஞ்சொன்னேன்
உள்ளபடியேயறுகு வெள்ளையதின்வேர்கொணர்ந்து
மெள்ள தினமேயருந்தச் சள்ளைபிரமியந்தீரும்
ஆடுதின்னாப்பாளைப் புழுயாற்றுமே. 5

வெள்ளையென்னுஞ் சாரணியில்கள்ளிவினிநோயகலும்
முள்ளியின்கருக்குரைக்கு பல்லின்வலிதானகலும்
கற்பூரவள்ளியிலை வைப்பாகவுண்பதற்கு
வெப்பாரிதற்குத்தகலும் இப்பாரில்பாண்டுவுக்கு
சூரியன்றன்காந்திதனிற் சேரும்வெப்புச்சாந்தியதாம்
மீருமரிகாந்திதனில் மேருகுளிர்போர்ந்துவிடும்
கொட்டையெனுமக்கரந்தைத் திட்டமுடனேயுதக
மெட்டினில்வடித்தருந்த வெட்டையதகலுஞ்சொன்னேன்
ஆகாசகருடன் விஷமாற்றுமே. 6

கொம்பரக்குவேரநேகம் வம்புசுரம்போயகலும்
தென்பதுறும்காயசித்தி இன்பமுடனேயருந்த
பாசிதனில்நீர்கிரிச்சல் தோஷமொடுசூலையறும்
ஆசைகுத்துப்பாலைதனில் மாச்சுவிடுமேபரவை
வன்னியிலூ துவயிறுண்ணத் தீருமென்றுமிக
சின்னியிலைச் சிறுசெடி தன்னில்வாரணமகலும்
கோளியவரைதனில் நீள்சுளிகளைகளொடு
ஈளைவயிறூதல்வெப்பு கோளைமாந்தகாசமறும்
சுண்டையதின்வேர்ப்பொடியின் மண்டையதின்நீரகற்றும்
என்சொல்லியகடிகள்வண்டு கொல்லியாலோடும்
பாதிரிவேரநேகம் சாதுரிகமானதொளிர்
நாதரருள்காணவென்று ஓதுமுனிவர்சொல்
ஆற்றலரி அஷ்டகுன்மமாற்றுமே. 7

விச்சுவெனுமூலிகையில் பச்சைநல்லபால்கறந்து
கொச்சையுள்ளமாதருக்குக் கச்சகதவாசையுண்டு
பூராயமானதொரு தோராதசூனியங்கள்
ஆராவாரமதனால் மீராதகலுங்கண்டீர்
மல்லாரையென்றும்மிக சொல்லாதநற்கணைகள்
வெல்லாதவாதமெனும் பொல்லாதநோயகலும்
எட்டியுடவேரவையில் குஷ்டம்பதினெட்டுமோடும்
திட்டமுடனேவிசும் அஷ்டகுன்மமேயகலும்
நீலியுற்றவேரில்வளக் கோலியுற்றநஞ்சகலும்
வேலியுற்றமேபருத்தி யாலேயுற்றவாதமறும்
நிலவேம்பினால்சுரங்கள் மலைவேம்பிலேபாடும்ஜன்னி
இலைவேம்பில்கட்டுவயிர் தலைவேம்பிலுண்டநேகம்

குண்டுமணியின்கொடியால் உண்டநேகமேல்வினோதம்
செண்டுமுலைமாதர்வந்து கண்டுகொள்வார்கள்நிதம்
அத்திவேர் வயிற்றுகடுப்பை யாற்றுவோம் 8

குண்ணிதன்வேர்உணவை ஜன்னியுடன்வேர்வைமெத்த
நண்ணியசுரோணிதமும் விண்ணில்கண்டோடும்சிறு
பிள்ளைகள்நீர்க்கட்டலும் வெள்ளைவாதங்களோடும்
தள்ளைதோடாமூலியிலை மூளைநோய்கள்தானகலும்
வட்டமெனும்பிரமி தட்டதட்டச்சுரம்போகும்
குட்டியவிளாவுங் குமட்டிவரும்வாந்திசத்தீ
பேய்ப்பீர்க்கினாலரத்தை வாய்ப்பார்க்கவேயுணர்வை
பேய்ப்பாயும்நஞ்சுவிஷம் சாய்ப்பாகவோடிவிடும்
பங்கதனில்மூலிகையின் மங்குசொரித்தேமல்களும்
பொங்கியண்டவாதசன்னி இங்கிதமாயேகிவிடும். 9

மூலிகைபிரயோகமே சகலருக்கும்
ஈசன் துணையாகுமே.



